# आत्म विद्या विलास:

# ஆத்ம வித்யா விலாஸம்

(ஸதாசிவ பரஹ்மேந்திரர் அருளியது)

## பூஜ்யஸ்ரீ வித்யானந்தகிரி ஸ்வாமிகள்

அருளிய

விளக்கவுரையுடன்




1995

ஸ்ரீ ஞானானந்த நிகேதன்

தபோவனம் அஞ்சல் - 605 756

விழுப்புரம் ரா. ப. மாவட்டம்

தமிழ்நாடு

ஓம்

# ஸமர்ப்பணம்

ஸத்குரு ஸ்ரீ ஞானானந்தகிரி ஸ்வாமிகளிடம் தபோவனத்தில் முதன் முதலாக ஸந்யாஸ தீக்ஷையும் மஹா வாக்கியோபதேசமும் பெற்றவர் ஸ்ரீ வித்யானந்தகிரி ஸ்வாமிகள். பூர்வாச்ரமத்தில் அவரது பெயர் சிவ சங்கர தவே. இவர் 1.1.1906ல் தஞ்சையில் ஸ்ரீபால கிருஷ்ண தவே, ஸ்ரீமதி ஜானகீபாய் என்ற குஜராத்திய பிராம்மண தம்பதிகளுடைய குமாரராய்ப் பிறந்தார். தஞ்சையில் பள்ளியிலும், சென்னையில் கல்லூரியிலும் படித்தார். பத்தொன்பதாவது வயதில் ஸ்ரீமதி கங்குபாயுடன் அவரது திருமணம் நடந்தது. மாமனாரான ஸ்ரீ சுந்தரேச கொடேடியா 1925-27ல் திருவருணையில் அரசு சப்ரிஜிஸ்ட்ரராக பணிபுரிந்து கொண்டிருந்தார். அவர் ஸ்ரீ சேஷாத்திரி ஸ்வாமிகள், ஸ்ரீ பகவான் ரமண மஹரிஷி அவர்களின் பரமபக்தர். ஆகவே, ஸ்ரீ சிவசங்கர தவேக்கும் அடிக்கடி அந்த மகான்களை தரிசிக்கும் பாக்கியம் கிடைத்தது. அவர்களிடம் ஈடுபாடும் அதிகரித்தது. மிராசுதாராக இருந்த அவர் சில அரிசி ஆலைகளுக்கும் உரிமையாளர். பரந்த மனப்பான்மையும், தான தர்மங்களில் மிக்க ஈடுபாடும் உள்ளவர். பக்தி பாடல்கள் நன்றாகப் பாடுவார். காஞ்சி பரமாசார்யாள் தஞ்சை விஜயம் செய்த பின்னர், அவரிடம் தனி பக்தி ஏற்பட்டது. பஞ்சாயதன பூஜை மிக சிரத்தையுடன் செய்வதுடன், ஸரஸ்வதி மஹாலில் வித்வானாகயிருந்த பிரம்மஸ்ரீ பாலகிருஷ்ண சாஸ்திரிகளிடம் வேதாந்த ப்ரகரண கிரந்தங்களும் கீதை, உபநிஷத், பிரஹ்மசூத்ர பாஷ்யங்களும் பாடம் கேட்டு வந்தார். வடக்கு வீதி சங்கரமடத்தில் சங்கர ஜயந்தி உற்சவமும், தமது வீட்டிலேயே ரமண ஜயந்தியும், பங்காரு காமாக்ஷீ கோவிலில் ஸுவாஸினீ பூஜையும் சிறப்பாக நடத்துவார். தாமே வேதாந்த பாடம் சொல்லவும் ஆரம்பித்தார். அதற்கு ஸந்யாசிகளும் வருவதுண்டு.

வேதாந்தத்தில் சிரத்தை அதிகரித்ததால், லௌகீக வ்யவஹாரங்களில் அவரது மனம் ஈடுபடவில்லை. 1943ல் தஞ்சையிலிருக்கும் தமது சொத்துக்களை எல்லாம் விற்றுவிட்டு சென்னையிலே தங்கிவிட்டார். காஞ்சி பரமாசார்யாளை அடிக்கடி தரிசித்துக் கொண்டு அவரது பரிபூர்ண அனுக்கிரஹத்திற்குப் பாத்திரமானார். வேதாந்த சிந்தனையிலேயே மனம் லயித்து, சென்னை கடற்கரையில் ஏகாந்தத்தை நாடுவார். ஒருநாள் ஒரு கோவிலில் விழுப்புரத்திற்கருகிலுள்ள தபோவனம் ஸ்ரீ

ஞானானந்தகிரி ஸ்வாமிகளைப் பற்றி கேள்வியுற்றார். 1964ல் தஞ்சையில் சில கார்யங்களை முடித்துவிட்டு சென்னை திரும்பும் போது, விழுப்புரம் சந்திப்பில் ரயில் நின்றவுடன், ஸத்குரு ஸ்ரீ ஞானானந்தகிரி ஸ்வாமிகளின் நினைவு வரவே, அங்கு இறங்கி திருக்கோவிலூருக்கு சென்றார். பிருந்தாவனத்தில் ஸ்ரீ ரகோத்தமரை தரிசித்து, தபோவனம் ஆச்ரமத்தில் ஸத்குரு ஸ்வாமிகளிடம் வந்து சேர்ந்தார். குருநாதரும் அவரை அன்புடன் வரவேற்று தங்கும்படி பணித்தார். 1964 ஆம் ஆண்டு சங்கர ஜயந்தியன்று ஸத்குருநாதர் ஸந்யாஸதீக்ஷையுடன் மஹாவாக்கிய உபதேசமும் அவருக்கு அளித்து, வேதாந்த வித்பன்னராக இருந்ததை மெச்சி வித்யானந்தகிரி என்ற தீக்ஷா நாமத்தைச் சூட்டினார்கள். தீக்ஷயளித்த அத்தினத்தில் நமது குருநாதர் தமது சிரம்மேல் குருபாதுகைகளைத் தாங்கி வந்து பக்தி பரவத்திலிருந்தது, பக்தர்கள் என்றென்றும் மறக்கமுடியாத காட்சி.

ஸர்வகர்ம ஸந்யாஸ பூர்வகமான ஞானநிஷ்டையே துறவிகளின் தர்மம் என்று வலியுறுத்தும் குருநாதர், ஸந்யாசிகள் ஸ்ரீ வித்யானந்தகிரி ஸ்வாமிகளிடம் வேதாந்த ச்ரவணம் செய்ய தக்க ஏற்பாடு செய்து, சில சமயங்களில் தாமே அக்ராஸனம் வஹித்து அவர்கட்கு அனுக்ரஹம் செய்து வந்தார்.

தீவிர வைராக்யத்தையுடைய ஸ்ரீ வித்யானந்தகிரி ஸ்வாமிகள் சிறிது காலம் பர்யடனம் செய்ய விருப்பங்கொண்டு, தபோவனத்திலிருந்து பாதயாத்திரை மேற்கொண்டார். பெரியகுளம் என்ற ஊரை அடையும் முன்பு மயக்கமாய் விழுந்து விட்டார். அந்த ஊர் கோவில் சிவாசார்யார் இவரைக் கண்டு, முகத்தில் தண்ணீர் தெளித்து எழுப்பி, பிக்ஷயளித்து பணிவிடை செய்தார். அங்கிருந்து கிளம்பி இளையாத்தங்குடி அடைந்த பிறகு ஒரு பக்தர் பாதயாத்திரை போதும் என்று அவரை வற்புறுத்தி சென்னைக்கு அழைத்துச் சென்றார். சென்னை திருமுல்லைவாயில் ஸ்ரீ வைஷ்ணவீ கோவிலில் அவர் தங்குவதுண்டு. தபோவனம் திரும்பி வந்து மீண்டும் வேதாந்த பாடம் ஆரம்பித்தார். ஏகாந்தத்தையே நாடும் இவரை தபோவனத்தில் தென்பெண்ணையாற்றங்கரை மிகவும் ஈர்த்தது. அங்கு மணிக்கணக்காக ஆத்மநிஷ்டையில் மூழ்கி இருப்பார்.

ஸ்ரீஸதாசிவ ப்ரஹ்மேந்திரரிடம் ஸ்ரீ வித்யானந்தகிரி ஸ்வாமிகளுக்கு மிகவும் பக்தி உண்டு. 1988ம் வருடம் சாதுர்மாஸ்யத்தின் போது நெரூர் சென்று அங்கு நான்கு மாதங்கள்

தங்கினார். ஸ்ரீ ஸதாசிவப்ரஹ்மத்தின் கிரந்தங்களில் அவருக்கு விசேஷமான ஈடுபாடு இருந்தது. அங்கு அவரிடம் வேதாந்த ச்ரவணத்திற்காக பக்தர்கள் வருவார்கள். அவர்கள் தங்கிய இடத்தில் ஒருவேதபாடசாலை நன்கு நடைபெறுகிறது.

ஏழு சிஷ்யர்களுக்கு பல்வேறு சமயங்களில் ஸந்யாச தீக்ஷை வழங்கி ஆத்மானந்தகிரி, நித்யானந்தகிரி, சங்கரானந்தகிரி, பூர்ணானந்தகிரி, ஸத்யானந்தகிரி, சிவானந்தகிரி, ஞானசம்பந்தகிரி, என்ற தீக்ஷா நாமங்கள் அளித்தார். நித்யானந்தகிரி, பூர்ணானந்தகிரி என்று இரு சிஷ்யர்களுடன் வடநாட்டு யாத்திரை சென்று கல்கத்தா, பசுபதிநாத், காசி, ரிஷிகேசம் முதலிய க்ஷேத்திரங்களை தரிசித்தார்.

1989 ஆம் ஆண்டு சித்ரா பௌர்ணமி தினத்தன்று ஸ்ரீ வித்யானந்தகிரி ஸ்வாமிகள் தபோவனத்தில் துறவிகளும், பிரம்மச்சாரிகளும், முமுக்ஷுக்களும், ஆன்மீகத்தில் நாட்டம் கொண்ட மற்ற மதத்தினரும் ஏகாந்தமாக தங்குவதற்கும், அவர்களது பிக்ஷை மற்றும் ஆகார வசதிகள் செய்து கொடுப்பதற்கும் ஸ்ரீ ஞானானந்த நிகேதன் என்ற அறக்கட்டளையை நிறுவினார்.

ஸ்ரீ வித்யானந்தகிரி ஸ்வாமிகள் 1989ல் தபோவனத்திலிருந்து கிளம்பி திரிசூர் - வடக்காஞ்சேரி அருகில் உள்ள வியாச தபோவனத்திற்குச் சென்று அங்கு சிலகாலம் தங்கினார். பின்னர் ஸ்வாமிகள் சென்னையில் வாசம் செய்வதற்கு ஸ்ரீ மயில்சாமி கௌண்டர் என்ற பக்தர் மிகவும் சிரத்தையுடன் தக்க ஏற்பாடு செய்தார். சிறிது காலம் கழிந்தபின் ஈரோடுக்கு அருகில் சாமிநாதபுரம் என்ற ஊரில் ''சாந்தி நிலையம்'' என்ற ஆச்ரமத்தை அந்த பக்தர் நிறுவியவுடன் ஸ்வாமிகள் அங்கு சென்று தங்கலானார்.

ஸ்ரீ ஸதாசிவேந்திரர்களிடம் சிறந்த பக்தி கொண்ட ஸ்வாமிகள் அவருடைய ஆராதனை நாளான 10.5.95லேயே தசமி திதியன்று மஹாஸமாதியடைந்தார். ஸ்ரீ ஞானானந்த தபோவனத்தில் ஸ்வாமிகளது திருமேனியை ஸமாதியில் அமர்த்தி சாஸ்திரப்படி ஸம்ஸ்காரங்கள் செய்யப்பட்டன.

ஸ்வாமிகள் சாந்திநிலையத்தில் இருக்கும்போது ஸ்ரீ ஸதாசிவ ப்ரஹ்மேந்திரர் அருளிய ''ஆத்ம வித்யா விலாஸம்'' என்று பெயர் கொண்டதும், குரு சிஷ்ய ஸம்வாத ரூபமாக அமைந்ததும், வேதாந்த ஸாரத்தைச் சுருக்கமாகக் கூறுவதுமான சிறிய ப்ரகரண கிரந்தத்தை சிஷ்யர்களுக்குப் பாடமாகச் சொன்னார். அது கேசட்டில் ஒலிப்பதிவு செய்யப்பட்டது. அவரது ஆக்ஞைப்படி அதை

சீர்ப்படுத்தி, சில குறிப்புகள் சேர்த்து புத்தக வடிவமாக அவரது ஜயந்தியான 28.12.95 அன்று அவரது பாதாரவிந்தங்களில் ஸமர்ப்பிக்கப்படுகின்றது.

''ஆத்ம வித்யாவிலாஸம்'' என்ற அதே பெயரைக் கொண்ட மற்றொரு ப்ரகரண கிரந்தத்தில் ஸ்ரீஸதாசிவ ப்ரஹ்மம் ஜீவன் முக்தரின் ஞானவிலாஸங்களை மிகவும் அழகாக வர்ணித்துள்ளார்.

''சாஸ்திரக் குவியல்களை முற்றும் விட்டுவிட்டு வியவகாரம் முழுவதையும் துறந்து, பூர்ண நிலையையடைந்து யோகியானவன் அசையாத தீபத்தைப்போல் இருக்கின்றான்.''

''சென்றதைச் சிறிதும் மனதில் சிந்திப்பதில்லை. வரப்போவதைக் கொஞ்சமும் எண்ணுவதில்லை. எதிரேயுள்ள ஒன்றையும் காண்பதில்லை. எல்லாப் பொருள்களிலும் ஸமரஸமாய் விளங்கும் இணையில்லாத ஒருவன்.''

''வர்ணாச்ரம வித்யாசங்களைத் தாண்டி விதி முதலியவற்றை உதறித்தள்ளி பரிபூர்ண ஆனந்த ஞான மாத்திரமாய் எஞ்சி நிற்கின்றான் யதிச்ரேஷ்டன்''

இந்த பேரின்ப நிலையில் திளைத்திருந்த யதீந்திரர்களான ஸத்குரு ஸ்ரீ ஞானானந்தகிரி ஸ்வாமிகளின் இருபத்திரண்டாம் ஆராதனை மஹோத்ஸவ வைபவத்தின் போது, அவரது சிஷ்யரான ஸ்ரீ வித்யானந்தகிரி ஸ்வாமிகளின் சில ஆழ்ந்த சிந்தனைகளை இந்த ''ஆத்ம வித்யாவிலாஸம்'' என்ற ஸ்ரீ ஸதாசிவப்ரஹ்மேந்திரர்களின் ப்ரகரண கிரந்தத்தின் விளக்கவுரை வடிவமாக வெளியிடுவது நமது பாக்கியமே.

ஸத்குருநாதரின் பரிபூர்ண அனுக்ரஹமும், ஸ்ரீ வித்யானந்தகிரி ஸ்வாமிகளின் ஆசியும் பெற்று பக்தர்கள் யாவரும் பிறவிப் பயனாகிய ஆத்ம ஞானத்தைப் பெற்றுய்வோமாக.

ஸ்ரீ ஞானானந்த தபோவனம் — **ஸ்வாமி நித்யானந்தகிரி**
28.12.95

# ஸ்ரீ ஸதா சிவ ப்ரஹ்மேந்திரர்

## வரலாற்றுச் சுருக்கம்

ஸ்ரீ ஸதாசிவ ப்ரஹ்மேந்திரர்கள் மதுரையில் தெலுங்கு பிராமணர் குடும்பத்தில் அவதரித்து, சிவராமகிருஷ்ணன் எனப் பெயர் சூட்டப்பட்டு, தகுந்த வயதில் உபநயனமும் நடந்தபின், திருவிசைநல்லூரில் வித்யாப்யாஸம் செய்தார்கள். ஜன்மாந்திர பரிபக்குவம் பெற்றிருந்த அவர், திருமணம் ஆன பின்பு இல்லற வாழ்க்கை ஆரம்பிக்கும் முன்பே ஏதோ ஒரு நிமித்தத்தைக் கொண்டு வீட்டைவிட்டு வெளியேறி தமது ஞானகுருவாகிய ஸ்ரீ பரமசிவேந்திரர் தாளைச் சரணமடைந்தார். அவரிடம் மேலும் சாஸ்திரப் பயிற்சியும் உபதேசமும் கிடைத்ததும், அத்வைத ஞானம் அனுபவ ஸித்தமாயிற்று. அங்கு வரும் சாஸ்த்ரக்ஞர்களோடு அவர் அடிக்கடி தர்க்கம் செய்வதைக் கண்ட குருநாதர் ஒருநாள் "மௌனமாய் இரு" என்று ஆக்ஞை இட்டார்களாம். அது முதற்கொண்டு ஸதாசிவேந்திரர் மஹா மௌனியாகவே விளங்கினார். அவதூதராய் எங்கும் திரிந்தும், காவேரி மணல் மேடுகளிலும், கரையோரத்துப் புதர்களிலும், மரத்தடியிலும் அமர்ந்து ஞான நிஷ்டையிலேயே ஆழ்ந்திருந்தார். அவரது புகழ் நாடெங்கும் பரவிற்று.

ஆத்மயோகத்திலேயே நிலைத்திருந்த ஸதாசிவரைத் தேடி அணிமாதி அஷ்டஸித்திகள் வந்து சரணடைந்தன. அவர் அவற்றை வெளிக்காட்டவில்லை. எனினும் அவருடைய ஸஞ்சாரத்தில் பல அற்புதங்கள் நிகழ்ந்ததாக அவரது வரலாறு கூறுகின்றது.

சரீரப் ப்ரக்ஞையில்லாமல் அவதூதராய் ஸஞ்சரிக்கும்போது ஒரு சமயம் ஸதாசிவர் ஒரு முஸ்லீம் ஜமீந்தாரின் அந்தப்புரத்திற்குள் நுழைந்துவிட்டாராம். அவர் நிலையை அறியாமல் அந்த முஸ்லீம் கோபம் கொண்டு அவரது கையை வாளினால் வெட்டிவிட்டார். அதையும் உணராமல் வேறு பக்கம் திரும்பி ஸதாசிவேந்திரர் நடக்கலானார். இவர் ஒரு மஹானாக இருக்க வேண்டும் என்று கண்டு கொண்ட அந்த முஸ்லீம் அவரை பின் தொடர்ந்து தாம் அபசாரம் செய்ததற்கு மன்னிப்புக் கோரினார். ஸதாசிவர் வெட்டுண்ட பாகத்தைத் தடவினார். உடனே வெட்டுண்ட கை சேர்ந்துவிட்டது!

கொடுமுடிக்கருகே காவேரி மணல் மேட்டிலே ஸமாதியில் அமர்ந்திருந்த ஸதாசிவரை புதுவெள்ளம் புரட்டிக் கொண்டு போய்

சிறிது தூரத்தில் மணலுள் சொருகிவிட்டது. மூன்று மாதங்களுக்குப் பின்பு அவரது தேகம் அதிருஷ்டவசமாகத் தோண்டி எடுக்கப் பெற்ற போது யாதும் அறியாதவராய் தியானத்திலிருந்து எழுந்து சென்றாராம்.

ஜடபரதரைப் போல திரிந்த இவரது தலை மேலே ஒரு விறகுக்கட்டு அமர்த்தப்பட்டதாம். அவரும் அதை அப்படியே சுமந்து சென்று இறக்க வேண்டிய இடத்தில் அதை போட்டதும் விறகுக்கட்டு தீப்பற்றி எரிந்ததாம்.

வேறொரு சமயம் நெற்குவியலின் மேல் மெய்மறந்து படுத்திருந்த இவரைத் திருடனாகக் கருதி, அடிக்க வந்தவர்களின் ஓங்கின கைகள் ஸதம்பித்து நின்றுவிட்டனவாம்.

ஸதாசிவரின் திருவருள் பெற்றதாலேயே கல்வியறிவு ஒரு சிறிதும் இல்லாத பிரம்மசாரி ஒருவர் மஹாவித்வானாகி அரசசபையிலே புராணப் பிரவசனம் செய்து சன்மானங்களைப் பெற்றார்.

காவேரிக் கரையில் விளையாடிக் கொண்டிருந்த சிறுவர்களை ஒரு க்ஷணத்தில் ஆகாயமார்க்கமாக மதுரைக்கு அழைத்துச் சென்று ரிஷபவாகன மஹோத்ஸவத்தை தரிசனம் செய்வித்து, தின்பண்டங்கள் வாங்கிக் கொடுத்து திரும்பி ஊரிலே கொண்டு வந்துவிட்டார்.

பரிவ்ராஜகராகவே இருந்து வந்த ஸதாசிவேந்திரர் தமது பூத உடலை விட்டுவிட காலத்தை நிர்ணயித்து, தக்ஷிணவாஹினியாகக் காவிரி ஓடும் நெரூர் மணல் திட்டையே தமது உடலை ஆழ்த்துவதற்கு சரியான இடம் என்று கருதி, அங்கிருந்த சோலைகளையே தங்குமிடமாக அமர்த்திக் கொண்டுவிட்டார். குறிப்பிட்ட நாளாகிய வைசாக சுத்த தசமியன்று கிழக்கு நோக்கி ஸமாதி கொண்டருளினார். அவர் கூறியவாறே காசியிலிருந்து ஒருவர் பாண லிங்கத்தை கொண்டு வந்தார் அதை ஸமாதியில் ப்ரதிஷ்டை செய்தார்கள்.

ஸதாசிவேந்திரர் யோகஸுதாகரம் என்ற யோக ஸுத்ரவிருத்தி, ப்ரஹ்மஸுத்ர விருத்தி ஆகிய வியாக்கியானங்களையும், ஸ்ரீ அப்பய்யதிக்ஷிதரின் ஸித்தாந்த லேசஸங்க்ரஹத்தையொட்டி ஸித்தாந்த கல்பவல்லி என்ற நூலையும், மற்றும் சிவமானஸிகபூஜா, ஆத்ம வித்யா விலாஸம் முதலிய ப்ரகரணங்களையும் பக்திரஸமும், ஞான அனுபவமும் ததும்பும் அநேக கீர்த்தனங்களையும் இயற்றியுள்ளார். இவையெல்லாம் தமது குருமூர்த்தியின் திருவருளாலேதான் என்பதை ''ஹம்ஸ'' என்றும் ''பரமஹம்ஸ'' என்றும் குருமுத்திரை வைத்துப்

பாடிக் காட்டியிருக்கிறார். ''நான் ப்ரஹ்மமே அன்றோ? ஸத்குருவின் கிருபையால் நான் ப்ரஹ்மமே அன்றோ?'' என்றும், இவ்வாறு பரமஹம்ஸரான குருவினால் மாயை என்னும் அவித்தையை விரட்டிய அத்வைத வித்யையானது சொல்லப்பட்டது'' என்றும் ''நான் பரமசிவேந்திரர்கள் என்னும் ஸ்ரீ குருவாகிய சந்திரனைக் கண்டு கிளர்ந்து எழும் எல்லையற்ற நிர்வாண ஸுகமாகிய ஸாகரம்'' என்றும், அத்வைதானுபவத்தில் திளைத்திருந்த இந்த அவதூதர் தமது குருகிருபையைப்பாடும் நிகரற்ற குருபக்தியை என்னவென்று சொல்வது? தமது குருமூர்த்திகளிடம் அனுபவ பூர்வகமாய் கண்டறிந்த ஜீவன்முக்த லக்ஷணங்களை 'ஆத்ம வித்யா விலாஸம்' என்ற நூலில் மிக அழகாக வர்ணித்துள்ளார். இந்த ஞான விலாஸங்கள் அனைத்தும் ஸ்ரீ ஸதாசிவ ப்ரஹ்மேந்திரரிடமும் காணப்பெற்றன.

''ஸதாசிவ ப்ரஹ்மத்தின் கருணையைப் பெற்றால் காமியும் இந்திரியங்களை வென்றவனாவான். கொடியவனும் பரம சாந்தனாவான், அறிவீனனும் பேரறிவாளனாவான்'' என்பது சிருங்கேரி ஜகத்குரு ஸ்ரீ ஸச்சிதானந்தசிவாபிநவ ந்ருஸிம்ஹ பாரதி ஸ்வாமிகளின் திருவாக்கு. ஆகவே ஸதாசிவ ப்ரஹ்மத்தை நமஸ்கரித்து அவர்களது கிரந்தங்களைப் படித்தும், கீர்த்தனங்களைப் பாடியும், நாம் அனைவரும் குரு கிருபையால் ஆத்ம ஞானம் பெறுவோமாக.

ஓம் தத்ஸத்

# மதிப்புரை

ஸ்ரீ ஸதாசிவ ப்ரஹ்மேந்த்ராளை உலகில் முமுக்ஷுக்கள் யாவரும் அறிவார்கள். அவர் அருளிய ஞானநூல்களுள் ஆத்ம வித்யா விலாஸம் என்பது அணையாத ஞானதீபம். ஒரு கார்த்திகையில் ஒருவர் தீபம் ஏற்றினால், அதை மற்றொருவர் வீடு பூராவும் கொண்டு வைப்பது போல், அந்த ஞான தீபத்தை தூண்டிவிட்டு அதிகப்பிரகாசப்படுத்துகிறார் ஸ்ரீ வித்யானந்தகிரி ஸ்வாமிகள். அதை வீடு பூராவும் கொண்டு வைப்பது போல் யாவருக்கும் கிடைக்கும்படி அழகிய புத்தகமாய் வெளியிட்டுத் தருகிறார் ஸ்ரீ நித்யானந்தகிரி ஸ்வாமிகள். இந்த தீபத்தை ஏற்றிய ஸ்ரீ ஸதாசிவ ப்ரம்மம், இந்த விளக்கை ப்ரகாசப்படுத்திய ஸ்ரீ வித்யானந்தகிரி, இதை பொதுமக்களின் இதய வீட்டில் வைத்து பிரசாரம் செய்யும் ஸ்ரீ நித்யாநந்தகிரி, இம்மூவருக்கும் நாம் கடமைப்பட்டுள்ளோம். இவ்வாறு உலகில் அக்ஞான இருளை விலக்க வேண்டுமென்று ஸங்கல்பித்த தபோவனம் பரஹ்மேந்த்ராளான ஸத்குரு ஸ்ரீ ஞானானந்தகிரி ஸ்வாமிகளை நாம் மறவோம். ஸ்ரீ வித்யானந்தகிரி ஸ்வாமிகள் என்ற பெயருக்கேற்றபடி ஆத்மவித்யாவிலாஸத்தை உபதேசித்தார் ஸ்வாமிகள். அந்த ஆத்மவித்யையைப் பெற்றால்தான் நித்யானந்தமேற்படும் என்று ஸ்ரீ நித்யானந்தகிரி ஸ்வாமிகள் அதை புத்தகமாக்கி வெளியிட்டுள்ளார். பரமஹம்ஸர்களே இதை உபதேசிக்கலாம். எப்போதும் ஆத்மானுபவத்திலேயே இருந்த ஸத்குரு ஸ்ரீ ஞானானந்தகிரி ஸ்வாமிகளின் பிரதம சிஷ்யர் ஸ்ரீ வித்யானந்த்கிரி. அவர் ஆத்மானுபவத்திலேயே லயித்திருந்தவர். அந்த மஹானின் வாக்கு அம்ருதமே இந்த ஞானநூல். இதை பலதடவை படித்து மக்கள் பயன் பெறுவார்கள் என்பதற்கு ஐயமில்லை. தபோவனம் இதுபோன்ற ஞானநூல்களை மேலும் மேலும் மக்களுக்கு வழங்கி மக்களின் அக்ஞான இருளை நீக்கி மக்களுக்கு நிம்மதியளிக்க வேண்டுகிறோம்.

பரனூர்
*19.12.95*

இப்படிக்கு
**ஸ்ரீ க்ருஷ்ணப்ரேமீ**

# ஆத்ம வித்யா விலாஸம்

''ஆத்மவித்யா விலாஸம்'' என்ற பெயர் கொண்ட இரண்டு கிரந்தங்களை அவதூதரும், பரமஞானியும் ஜீவன்முக்தருமான ஸ்ரீ ஸதாசிவப்ரஹ்மேந்திரர்கள் இயற்றியதாகக் கூறப்படுகின்றது. அவற்றில் 65 ச்லோகங்கள் கொண்ட ஒரு நூலில், கிரந்தத்தையியற்ற ஆரம்பிக்குமுன் தமது குருநாதரை வந்தனம் செய்வது என்ற மரபை அனுஸரித்து, கைவல்யானந்தக்குருத்தும் ஆதிகுருவரனுமாம் ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தியை நமஸ்கரித்து, பின்னர் தமது குருவான ஸ்ரீபரம சிவேந்திரர்களின் பாதுகைகளைப் புகழ்கின்றார். அதன் இறுதியில் அறுபத்து மூன்றாம் ச்லோகத்தில் ''குருவின் கருணாகடாக்ஷத்தினால் இவ்வாறு அறுபத்திரண்டு கோதிலா ஆர்யாவிருத்தங்களால் வேதாந்த சாஸ்திர ஸாரப் பொருளையியம்பினேன்'' என்று கூறுகிறார். அக்கிரந்தம் அபரோக்ஷ ஞானியான ஜீவன்முக்தனின் ஞான விலாஸங்களையும் அவரது அனுபவமாகிய பரமானந்த நிலையையும் கூறுகிறது. ''தானாக ஆத்மாவிடத்தே ஸந்தோஷித்திருப்பவன்'', 'ஸ்திதப்ரக்ஞன்', 'ஆத்மாராமன்' என்றெல்லாம் கீதை குறிப்பிடும் பேரின்பநிலையிலுள்ள ஆத்மஞானியின் அனுபவத்தையும் பரமலக்ஷணங்களையும் வர்ணிக்கும் அந்த நூலில் ''அருண்மிகு பரமசிவேந்திர குருவின் சீடனாம் ஸதாசிவேந்திரனால் இயற்றப்பெற்ற 'ஆத்மவித்யா விலாஸம்' என்ற பெயரிட்ட இந்நூல் இங்ஙனம் முற்றுப்பெற்றது'' என்று அவரது வாக்கும் காணப்படுகிறது.

'ஆத்ம வித்யா விலாஸம்' என்ற அதே பெயரைக்கொண்ட இந்த இரண்டாம் கிரந்தத்தில் பரமசிவேந்திரர்களின் பெயர் காணப்படவில்லை. எனினும், இந்த நூலின் எழுத்து நடையிலிருந்தும் விஷயத்தை விளக்கும் முறையிலிருந்தும், சில வார்த்தை கோவைகளிலிருந்தும் இது ஸ்ரீ ஸதாசிவ பரஹ்மேந்திரர்களால் இயற்றப்பட்ட கிரந்தம் தான் என்று தெரியவருகிறது. இது ஸ்ரீரங்கம் வாணீவிலாஸ் அச்சகத்தாரின் Minor works of Sri Sadasivendra Saraswati என்ற பிரசுரத்தில் காணப்படுகிறது. அந்த பதிப்பின் முன்னுரையில் தஞ்சை ஸரஸ்வதீ மஹால் நூல்நிலையத்தில் ஒரு கையெழுத்துப் பிரதி உள்ளது என்ற குறிப்பு இருக்கிறது. தஞ்சாவூர் சரபோஜி மஹாராஜாவின் *(17-11-1729)* ஸமஸ்தான பண்டிதர் ஒருவர் தீபாம்பாபுரத்தில் ஸ்ரீஸதாசிவ ப்ரஹ்மேந்திரரை தரிசித்து அவருக்கு மும்முறை

பிக்ஷையளித்து அரசருக்கு ஸந்தானப்ராப்தி ஏற்பட அனுக்ரஹிக்க வேண்டுமென்று பிரார்த்தித்ததாக குறிப்பிடுகிறது. ஸ்ரீ ஸதாசிவ ப்ரஹ்மேந்திரர்களும் விரைவிலேயே மஹாராஜாவிற்கு ஆண் குழந்தை பிறக்கும் என்று செய்கையால் காட்டி ஆசீர்வதித்து தனக்கு ''ஆத்மவித்யா விலாஸம்'' என்ற தமது கிரந்தத்தைக் கொடுத்து அருளியதாக அப்பண்டிதர் அக்குறிப்பில் கூறுகிறார். நாற்பத்தி மூன்று ச்லோகங்கள் கொண்ட இச் சிறிய கிரந்தத்தில், ஸ்ரீ சங்கர பகவத்பாதாசாரியர் விவேகசூடாமணியில் விஸ்தாரமாக 580 ச்லோகங்களில் அருளிய வேதாந்த சாஸ்திர ஸாரப் பொருளை, குரு சிஷ்ய ஸம்வாத ரூபமாக ஸ்ரீ ஸதாசிவ ப்ரஹ்மேந்திரர் நமக்கு அனுக்ரஹிக்கிறார். இது முமுக்ஷுக்களின் அனுஸந்தானத்திற்கு மிகவும் உபயோகமாக இருக்கும்.

# || आत्म विद्या विलासः ||

# ஆத்ம வித்யா விலாஸம்

यत्पादपद्ममकरन्दजुषां नराणां
संसारघोरभुजगान्न भवेत्स्म भीतिः ।
सच्चिद्घनं सकलसौख्यलवाम्बुराशिं
श्रीदक्षिणाभिमुखमूर्तिमजं भजेऽहम् ॥१॥

யத்பாத பத்ம மகரந்தஜுஷாம் நராணாம்
ஸம்ஸார கோர புஜகான்ன பவேத்ஸ்ம பீதி: ।
ஸச்சித்கனம் ஸகல ஸௌக்ய லவாம்பு ராஶிம்
ஸ்ரீ தக்ஷிணாபி முக மூர்த்திமஜம் பஜேஹம் ॥ 1 ॥

***1. பொழிப்புரை***

எவரது பாதகமலங்களின் மகரந்தத்தை நுகர்வதிலேயே களிப்புறும் மானிடர்களுக்கு ஸம்ஸாரமெனும் கோரமான ஸர்ப்பத்தின் பயம் இருப்பதில்லையோ, ஸன்மாத்ரமாயும், (நிர்விகல்ப) சின்மாத்ரமாயும் அத்வயமாய் நீக்கமில்லா நிறைந்து அகண்டமாய் விளங்குபவரும், என்றும் பிறவாத சாச்வதரும், எல்லா உலக இன்பங்களையும் தனது திவலைமாத்திரமாகக் கொண்ட பரமானந்த ஸாகரனும் ஆன, அந்த தென்திசை நோக்கி அமர்ந்துள்ள ஆதிகுருமூர்த்தியை வணங்குகிறேன்.

**விளக்கம்**

ஒவ்வொரு யுகத்திலும் ஸ்ருஷ்டியின்போது, முன் ஜன்மங்களில் செய்துள்ள புண்ணிய பாபங்களுக்கேற்ப ஜீவர்களுக்கு கர்மபலனை அனுபவிப்பதற்கு வேண்டிய போகாயதன சரீரங்களையும் போக கரணங்களையும், போக்ய பதார்த்தங்களையும் போகப்ரதா(கர்மபலதாதா)வாகிய ஈச்வரன் படைத்தருளுகிறார். மேலும், அவர்களை ப்ரேயஸ்ஸையும் (செல்வத்தையும்) ச்ரேயஸ்ஸையும் (உறுதியான மேலான நன்மையையும்) நேரே தருவதான இருவகையான தர்மத்தைக் கைக்கொள்ளுமாறு செய்தார். செல்வங்களையும், உலக இன்பங்களையும் அடைவது ப்ரேயஸ். மேலான நன்மையான மோக்ஷத்தையடைவதே ச்ரேயஸ். ப்ரேயஸ்ஸுக்காக உள்ள தர்மம் ப்ரவ்ருத்தியாகும். ச்ரேயஸ்ஸுக் காக உள்ள தர்மத்தை நிவ்ருத்தி தர்மம் என்பார்கள். வேதத்திற்கூறிய ப்ரவ்ருத்தி, நிவ்ருத்தி என்றும் இந்த இருவகையான தர்மம் உலகத்தை ஒழுங்குபட, நிலைபெறச் செய்கிறது.

பகவான் உலகத்தைப் படைத்து முதலில் மரீசி முதலிய ப்ரஜாபதிகளை ஸ்ருஷ்டித்து ப்ரவ்ருத்தி தர்மத்தைக் கைக்கொள்ளச் செய்தார். பின்பு ஸனகர், ஸனந்தனர் முதலிய மற்றோரையும் படைத்து, ஞானவைராக்கியங்களைக் குறிப்பாகப்பெற்ற நிவ்ருத்தி தர்மத்தை மேற்கொள்ளச் செய்தார். ப்ரஹ்மாவின் மானஸிக புத்திரர்களும் உயர்ந்த ஞானிகளுமான ஸனகாதிகளுக்கு ஞான மார்க்கத்தை உபதேசிக்கும் பொருட்டு, நாமரூபங்களைக் கடந்த பரப்ரஹ்மமாகிய ஈச்வரனே தமது மாயா சக்தியைக் கொண்டு ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தியாக அவதரித்தார்.

'தக்ஷிணாமூர்த்தி' என்றால் தென்திசையை நோக்கி அமர்ந்திருக்கும் வடிவினையுடைய பெருமான் •எனப்பொருள். வாஸ்தவத்தில் அவருக்கு பிறப்பு கிடையாது என்பதைக் குறிப்பதற்காகவே அவரை ''அஜம்'' என்று கூறுகிறார். ஸ்ரீ - மாயாசக்தி; தக்ஷிணா - தேர்ந்த, சாமர்த்தியமுடைய; அமூர்த்தி - உருவமில்லாதவன், ஞானவைராக்கிய லக்ஷணங்களையுடைய நிவ்ருத்தி தர்மத்தை போதிப்பதற்காக, இன்னதென்று சொல்ல அரிதாகிய தமது மாயாசக்தியினால் உலகத்தைப்படைத்து நிலைப்படுத்தி, அழித்து அமைப்பதிலே சாமர்த்தியம், வல்லமை உடையவராயினும், வாஸ்தவத்தில் உருவில்லாத பரம்பொருளே ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி அவதாரமாகும். ஸம்பவிக்க முடியாததையும் ஸம்பவிக்கும்படியாகச் செய்ய சாமர்த்தியம் உள்ள சக்தியே மாயை.

உலகத்திலேயே மேலான திறமையுள்ளவர் இந்த மாயாசக்தியைக் கொண்டு இந்த வடிவத்தை ஏற்கிறார் என்பதால், ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி எனப்படுகிறார்.

அவரது உண்மையான வடிவம் ஸ்வரூபம் ஸத், சித், ஆனந்தம். அவரை இங்கு 'ஸத்சித்கனம்' என்று குறிப்பிடுகிறார். கனம் என்றால் கட்டி போல் இடைவெளியில்லாத ஒரேபொருளாய், ஐஸ்கட்டி, இரும்புகட்டி என்பது போல இடைவிடாமல் அப்பொருளைத்தவிர வேறு ஒன்றும் இல்லை என்று அர்த்தம். அந்த ஒரே பொருளாய், அகண்டமாய், நாமரூபங்களுக்கு அப்பாற் பட்டதாய், தேசகாலவஸ்து பரிச்சேதரஹிதமாய், கேவலஸத்தா மாத்ரமாயும், அதே சித்ஏகரஸமாயும் உள்ள பரம்பொருள். 'சித்கனம்' என்றால் சுத்தமான அறிவு என்று அர்த்தம். நாம் சாதாரணமாக விஷயங்களை அறியும் அறிவையே அறிவு என்கிறோம். ஆனால் அவருடைய வடிவமோ அறிகின்ற செயலுள்ள அறிவல்ல. எல்லா அறியும் அறிவிற்கும் அடிப்படையான, அறியும் செயலற்ற, அறியப்படும் பொருளற்ற, நிர்விகல்பமான சின்மாத்ரமான ''கேவல'' அறிவு (மாத்திரமே) என்பதைக் காட்டவே 'சித்கனம்' என்று அவரை குறிப்பிடுகிறார்..

ஸமுத்திரத்தில் எல்லா நீர்த்திவலைகளும் (அணுக்களும்) சேர்ந்து ஒன்றாவதுபோல், உலகில் எந்த எந்த விஷயங்களில் எந்த எந்த ஆனந்தம் கிடைக்குமோ, அவையெல்லாம் சேர்ந்த கூட்டமும் அதையும் கடந்தது என்பதைத் தெரிவிப்பதற்காக ''ஸகல ஸௌக்கிய லவாம்புராசிம்'' என்று குறிப்பிடுகிறார். இந்த ஆனந்த ஸாகரத்தின் ஒரு திவலையினாலேயே எல்லா ஜீவர்களும் ஜீவிக்கின்றன என்றும், இந்திரன் போன்றவர்களின் சுகம் இந்த நிஜ ஸ்வரூபானந்தத்தின் ஒருலேசம், ஒரு திவலை மாத்திரமே என்றும் ச்ருதிகள் பறை சாற்றுகின்றன.

இத்தகைய நிஜானந்தகனஸ்வரூபியான குருவை நான் நமஸ்கரிக்கின்றேன் என்கிறார்.

த்ருஷ்டமான (கண்களுக்குப்புலப்படும்) இந்த லோகத்திலும், அத்ருஷ்டமான (கண்களுக்குப்புலப்படாத) அதாவது, தேகத்தை விட்டபின்பு அடையக்கூடிய ஸ்வர்காதி லோகங்களிலும், அவற்றின் நிலையற்ற தன்மையை நன்குணர்ந்து, அவற்றில் பற்றின்மை என்பதான வைராக்யம் உள்ளவனே குருவினிடம் வரத்தகுந்த சிஷ்யனாவான். அதிகாரியான

(தகுதியுள்ளவனான) அவனுக்குத்தான் அவர் ஞானோபதேசத்தை யருளுவார். கோரமான பாம்பைக்கண்டு அதனிடமிருந்து தப்புவதற்காக வேகமாக ஓடுவதுபோல், ஸம்ஸாரம் அநித்யம், துக்காலயம் - துக்கத்தின் இருப்பிடம், கோரமானது என்ற நிச்சய புத்தியும் வைராக்யமும் உள்ளவனாய், அதைத் தவிர்ப்பதற்காக, மோக்ஷத்தை விரும்பியவனாக, குருவினிடம் ஓடி வரவேண்டும். அப்படி வராதவனுக்கு இந்த ஞானமெனும் மருந்து பயன்படாது. கோரமான ஸம்ஸாரம் எனப்படும் பாம்பினால் இதுவரை கட்டுண்டு, பயந்து, ஓடிவந்து குருவினுடைய பாதஸேவையில் ஈடுபட்டதனால், இனி அந்த பாம்பின் பயமே அவனுக்குக் கிடையாது. "अभयं वै जनक प्राप्तोऽसि" ''ஜனக! நீ பயமின்மையை அடைந்துள்ளாய்'' என்கிறார் யாக்ஞ்யவல்கியர். குருவினிடம் சரணடைந்துவிட்டால் அவர் ஞானம் அருளுவார். இனி பயமின்மைதான். ஞானம் அடையும் முன்புதான், த்வைத உலகத் தோற்றத்தினால் தானே பயம்? ப்ரபோதமேற்பட்டபின் அத்வய மான நமது ஆத்ம ஸ்வரூபத்தை ஸாக்ஷாத்கரித்தபின் பயம் ஏது?

''ஜுஷ்'' என்றால் ஸேவிப்பது, களிப்புறுவது என்பது பொருள். ''ஜுஷாம்'' என்றால் ஸேவிப்போர்க்கு, களிப்புறுவோர்க்கு என்று அர்த்தம். ''எவரது பாதபத்மங்களின் மகரந்தத்தை நுகர்வதிலேயே களிப்புறும் மானிடர்களுக்கு ஸம்ஸாரமாகிய கோரமான ஸர்ப்பத்தின் பயம் இருப்பதில்லையோ'' என்பது ச்லோகத்தின் முதல் இரண்டு வரிகளுக்கு அர்த்தம். ''அபயம்'' எனப்படுவது பிறப்பற்றதும், ஸத், சித் ஆனந்த வடிவமுமாகிய அந்த ப்ரஹ்மத்தை தமது ஸ்வரூபமாக அறிந்து அதுவாகவே நிலையாக இருப்பது. அதற்கு ஸத்குருநாதரின் பாத தூளியை ஸேவிக்க வேண்டும்.

एतावदेव खलु पुंभिरवाप्तुमर्हं
यच्चेतसो निलयनं निजतत्वबोधे ।
आक्रोशनं श्रुतिशिरांशि यदर्थमेव
कुर्वन्ति येन हि भवेत्पुरुषः सुखाब्धिः ॥२॥

ஏதாவதேவ கலு பும்பிரவாப்து மர்ஹம்
யச் சேதஸோ நிலயனம் நிஜ தத்வ போதே ।
ஆக்ரோமனம் ஸ்ருதி ஸிராம்ஸி யதர்தமேவ
குர்வந்தி யேன ஹி பவேத் புருஷ:ஸுகாப்தி: ॥2॥

**2. பொழிப்புரை**

எந்த ஒரே பொருளை வேதங்களின் மகுடங்களாகிய உபநிஷத்துக்கள் பறை சாற்றுகின்றனவோ, எதனால் மட்டுமே மானுடன் ஆனந்தஸாகரனாய் விளங்குவானோ, எந்த உண்மை தத்வ ஞானத்தில் மனது லயிக்க வேண்டுமோ, அத்தகைய ப்ருஹ்மமே அல்லவா அடையத்தக்கது!

**விளக்கம்**

*நமக்கு வேண்டியது ஸ்வரூபமாக ஆனந்தஸாகரமாகவே, சுகக்கடலாகலே இருப்பதுதான். அதற்கு வழியைக்காட்டுகிறேன் என்கிறார். ''எந்த விஷயத்தைப்பற்றி வேதாந்தங்கள் உரக்க கோஷிக்கின்றனவோ'', - வேதத்தின் கடைசிபாகம் வேதாந்தம் - உபநிஷத்து. அது நாம் யாவரும் என்ன செய்ய வேண்டும் என்பதைப்பற்றி உரக்கக் கூறுகின்றது. எதைப்பற்றி? நமது உண்மையான ஸ்வரூபம் என்ன, என்பதை விசாரித்து தெரிந்து கொண்டு, அதிலேயே மனதை நிலைநிறுத்த வேண்டும் என்று பறை சாற்றுகின்றது. அந்த ஸ்வரூபம் என்னவென்பதையும் தெளிவுறக் கூறுகிறார். மனதை எதில் நிறுத்த வேண்டும்? 'நிஜதத்வபோதே' தன்னுடைய யாதாத்ம்யத்தைப்பற்றிய அறிவில் மனதை நிறுத்த வேண்டும். 'இதெல்லவோ மனிதனால் அடைவதற்கு ''அர்ஹதை'' தகுதியுள்ளது? இதல்லவோ பிறவிப்பயன்?'' என்கிறார். இப்பொழுது நீ அதத்வபோதத்தில் மனதை வைத்திருக்கிறாய், எப்படி? ''நான் இப்படிப்பட்டவன், என் பெயர் இது.'' என்பன போன்ற நினைவிலேயே தற்போது மனம் நிலைத்திருக்கின்றது. அந்த மனதைத் திருப்பி தனது தத்வபோதமான, உண்மை ஸ்வரூபத்தில் நிலை நிறுத்த வேண்டும். அனாத்மவஸ்துக்களான தேஹம், இந்திரியங்கள், வெளிவிஷயங்கள் ஆகியவற்றில் 'நான், எனது' என்ற எண்ணத்தை ஆத்மநிஷ்டையினால் நிரஸனம் செய்யவேண்டும். ஸ்வரூபநிஷ்டையினின்று நழுவாது ஆத்ம போதத்திலேயே முழுமனதைச் செலுத்தியவனாய் இருக்க வேண்டும். (Entire devotion to Knowledge)' 'ஆக்ரோசனம்' உரக்கக் கூறுகிறது என்கிறார். நீ என்னதான் ஹிரண்யகர்ப்பனாகவே*

ஆகிவிட்டாலும், அதற்கு மதிப்பு கிடையாது. எது அடையப்பட்டதோ, அது முடிவுள்ளதாகவே இருக்கும். எவ்வித மாறுதலும், முடிவுமற்றதுமாய் இருப்பது உனது ஸ்வரூபம் என்பதை நன்கு அறிந்துக் கொண்டு அதிலேயே நிஷ்டையுடன் இருப்பதுதான் சிறந்தது. உண்மையான மதிப்புடையது. அப்படியே மனதில் நினைத்துக்கொண்டு அதிலேயே மனம் கரைய வேண்டும், இறந்துவிட வேண்டும். அதுதான் மேலான மதிப்புள்ளது. அப்படியிருந்தால் இந்த ஜன்மத்தில் ஆனந்தமாய் இருக்கலாம். மீண்டும் ஜன்மம் கிடையாது. The main purpose of Sruti is to instruct you on this point. இதை உனக்கு எடுத்துரைப்பதுதான் ச்ருதியின் முக்கிய குறிக்கோளாகும் (முழு தாத்பர்யமாகும்). மனம் ஸ்வரூபத்தில் அடங்கி, தன்னுள்ளே இளைப்பாறி ஞான ஆனந்தஸாகரனாய், திளைத்திருப்பதே குறிக்கோள். ஸ்வரூப ஞானத்தையடைந்து, இடைவிடாமல் ப்ரஹ்மாப்யாஸத்தில் மனம் ஈடுபட்டிருப்பதே இதற்கு வழி. எவ்வாறு பக்தனின் மனம் எது செய்து கொண்டிருந்தாலும், படுத்துக்கொண்டிருக்கும்போதும் 'ராமா! கிருஷ்ணா!' என்று எவ்வித முயற்சியுமின்றி தானாகவே, இயற்கையாகவே ஸ்மரணத்தில் நிலைத்துள்ளதோ, அவ்வாறே குருநாதரால் உபதேசிக்கப்பட்ட உனது ஸ்வரூபத்தைப்பற்றியே உன்மனம் இடைவிடாமல் சிந்தனை செய்து கொண்டே இருக்க வேண்டும். நிலைத்து நிற்க வேண்டும். ச்ருதியே உனது உண்மையான ஸ்வரூபத்தின் தன்மையை விளக்கி ஞான மூட்டுகிறது என்பதை மேலும் கூறுகிறார்.

मातेव पुत्रमनुबोधयति श्रुतिर्हि
लोकं समस्तमपि योजयितुं सुखेन ।
तस्माच्छ्रुतेरभिहितार्थमतन्द्रितेन
चित्तेन साधयितुमत्र जना यतध्वम् ॥३॥

மாதேவ புத்ரமனுபோதயதி ஶ்ருதிர்ஹி
லோகம் ஸமஸ்தமபி யோஜயிதும் ஸுகேன ।
தஸ்மாச் ச்ருதேரபிஹிதார்தமதந்த்ரிதேன
சித்தேன ஸாதயிதுமத்ர ஜனா யதத்வம் ॥3॥

## 3. பொழிப்புரை

தாய் தனது மகனுக்கு (அன்புடன்) கற்பிப்பதுபோல், வேதம் (உபநிஷத்து) உலகம் முழுவதையும் தனது ஸ்வரூப ஆனந்தத்துடன் இணைப்பதற்காகவே, (சிஷ்யனின் தகுதியை அனுஸரித்து) மீண்டும் மீண்டும் உபதேசிக்கிறது. ஆகவே, ச்ருதியில் கூறப்பட்டுள்ள இப்பொருளை சோம்பலற்ற (விழிப்புடனுள்ள) (ஸூக்ஷ்மமும், ஒருமுனைத்ததுமான) மனதினால் (ஸாக்ஷாத்கரிக்கும் ஸாதனையில்) ஜனங்கள் முயற்சி செய்யவேண்டும்.

**விளக்கம்**

*ச்ருதியின் முக்கியத்வம் என்ன, அதில் நான் ஏன் முழு நம்பிக்கை வைக்கவேண்டும், என்றால் எப்படி தாயானவள் குழந்தையின் ஆரோக்கியத்தையும் தேவைகளையும் மனதிற்கொண்டு அதன் போக்குகளை அனுஸரித்து, உணவு கொடுப்பதுபோன்ற பலவிதமான அன்புப்பணிகளை பதிலுபகாரம் எதிர்பார்க்காமல் செய்கிறாளோ, அதைவிட அதிகமான சிரத்தையுடனும் கருணையுடனும் உலகத்திற்கெல்லாம் தாயான வேதம் உனது நன்மையை உத்தேசித்து தர்மத்திற்கு விரோதமில்லாத உனது ஆசைகளை பூர்த்தி செய்ய சாஸ்திர ஸம்மதமான வழிகளைக்கூறுகிறது. யௌவனத்தில் சிற்றின்பத்தில் ஈடுபட விரும்புவாயாகில், அதற்கு சாஸ்திரஸம்மதமான முறையில் ஒரு பெண்ணை கல்யாணம் செய்துகொண்டு இன்பமாக இருக்க வழியைப்புகல்கிறது. அவ்வாறே தர்மவிரோதமில்லாத எல்லா ஆசைகளையும் பூர்த்திசெய்ய சாஸ்திர ஸம்மதமான வழிகளைச் சொல்லி உலகவியவஹாரங்களை நடத்தவும் வழி கூறுகிறது.*

*"இந்த ச்ருதிக்கு இதனால் ஏதாவது லாபம் உண்டா? இதுதான் ச்ருதியின் முடிவான தாத்பர்யமா?" என்பதையும் விளக்குகிறார். தாயார் தனது கடமை என்று கருதி பதிலுபகாரம் எதிர்பாராமல் பருவத்திற்கேற்ப குழந்தைக்கு நன்மையைச்செய்வது போலவே, ச்ருதியும் அதிகாரி பேதத்தை மனதிற்கொண்டு போதிக்கிறது, அறிவுரையளிக்கிறது. உலகிலுள்ள எல்லோரையும் நித்யமான சுகத்தோடு, பேரின்பத்தோடு கூட்டிவைப்பதுதான் ச்ருதியின் நோக்கம். தர்மம் (அறம்), அர்த்தம் (பொருள்), காமம் (இன்பம்) என்ற மூன்று புருஷார்த்தங்களைக் கூறி எல்லாவற்றிற்கும்*

மேலான பரமபுருஷார்த்தமான மோக்ஷமாகிய ஆத்மசுகத்தை அடைவிப்பதே அதன் உண்மையான லக்ஷ்யம். ச்ருதியின் இந்த உண்மையான தாத்பர்யத்தை எளிதில் தெரிந்துகொள்ள முடியாது. அதையறிய சீரிய முயற்சி செய்யவேண்டும். ச்ருதிக்கு ஒத்துவரக்கூடிய சிந்தனையால் அதன் அர்த்தத்தை உட்பொருளை தெரிந்துகொண்டு அவ்வாறே செயல்படவேண்டும். சோம்பலுக்கு இடம் கொடுக்காமல் எப்பொழுதும் விழிப்புடன் உள்ள மனதுடன் ஜனங்கள் பிரயத்னம் செய்யவேண்டியது அவசியம் என்கிறார். ச்ருதி ப்ரமாணத்திலுள்ள சந்தேஹங்களைப் போக்குவதற்கு வேதாந்த ச்ரவணம் செய்து சிந்திப்பது அவசியம். ஆத்மசுகத்தை அடைய உபநிஷதமே பஹிர்முகமாயுள்ள மனதை அந்தர்முகமாக ஆக்குவதற்காக விளித்து, ஸாதனையான ச்ரவணம், மனனம், நிதித்யாஸனம் இவற்றைச் செய் என்று அறை கூவுகின்றது.

''எவ்வாறு சுத்த ஜலத்தில் விடப்பட்ட சுத்த ஜலம் அதனுடன் ஒன்றிவிடுகிறதோ அவ்வாறே அத்வயமான (இரண்டற்ற) ப்ரஹ்மத்தையறிந்த முனிவரின் ஆத்மாவும் அதனுடன் ஒன்றிவிடுகிறது.'' என்று கூறும் கடோபநிஷத்து (IV-15) மந்திரத்தின் பாஷ்யத்தில் ஆதிசங்கரர் கூறுகிறார்.

"तस्मात्कुतार्किक भेददृष्टिं नास्तिककुदृष्टिं चोज्झित्वा मातृपितृसहस्रेभ्योऽपि हितैषिणा वेदोपदिष्टं आत्मैकत्वदर्शनं शान्तदर्पैः आदरणीयमित्यर्थः । "

ஆகவே குதார்க்கிகர்களின் பேதத்ருஷ்டியையும், நாஸ்திகர்களின் குதிருஷ்டியையும் தவிர்த்து ஆயிரக்கணக்கான தாய் தந்தையர்களையும் விட அன்புடன் நமக்கு நன்மையையே அடைவிக்க விரும்பும் வேதத்தினால் உபதேசிக்கப்பட்ட வேறற்ற (அத்வயமான) ஏகமான ஆத்மாவின் அபரோக்ஷானுபூதி கர்வம் நீங்கியவர்களால் (ச்ரத்தையுடையவர்களால்) நன்கு மதிக்கப்பட வேண்டும்.'' என்கிறார்.

आदाविदं सकलमेव जगत्सदासी-
त्कुम्भादिवत्तदनु शक्तियुतात्परस्मात् ।

आकाशवायुदहनाम्बुभुवो बभुवु-
वातप्रसक्तसलिलादिव वीचिपूरः ॥४॥

ஆதாவிதம்ஸகலமேவ ஜகத்ஸதாஸீத்
கும்பாதிவத் ததனுஶக்தியுதாத் பரஸ்மாத் ।
ஆகாஶ வாயு தஹனாம்பு புவோ பபூவுர்
வாத ப்ரஸக்த ஸலிலாதிவ வீசிபுர: ॥4॥

**4. பொழிப்புரை**

(ஸ்ருஷ்டிக்கு) முன்னர் இந்த எல்லா உலகும் (நிர்விகல்பமான) அந்த ஸத்தாகவே இருந்தது. பின்பு (மாயா) சக்தியுடன் கூடிய அந்த பரப்ரஹ்மத்திலிருந்து, காற்று வீசுவதனால் ஜலத்தில் அலைகள் தோன்றுவதே போல், குடம் முதலியவை (குயவனால் விளையப்படுவதே) போல், ஆகாசம், வாயு, அக்னி, நீர், நிலம் என்றவை (தன்மாத்திரைகள் எனப்படும் ஸூக்ஷ்ம மஹாபூதங்கள்) உண்டாயின.

***விளக்கம்***

*உனது மனதை ஆத்ம போதத்தில் நிறுத்தவேண்டும் என்றார். ஆகவே ஆத்மஸ்வரூபம் என்ன என்பதைத் தெரிந்து கொள்ள வேண்டும். சாதாரணமாய் உனக்குத்தெரிந்த ''நான் இன்னார்'' என்பதே ஆத்மஸ்வரூபமாக இருந்தால், மேல் படிக்க வேண்டியது ஒன்றும் இராது. ஏனென்றால் ''எனக்குத்தான் என்னைத் தெரியுமே, அதில்தானே மனதை நிறுத்த வேண்டும்.'' என்று ஆகிவிடும். ஆனால், மேலே பாடம் சொல்லப்படுவதால் இந்த ''நான்'' என்பதற்கு வேறு ஒரு பொருள் உள்ளது என்றும், இந்த 'நான்', இந்த 'நான் இன்னார்' என்பதற்கும் ஸாக்ஷியாக, அதாவது அதையும் அறியப்படும் பொருளாகக் கொண்டு அறியும் வஸ்து, ஒரு சைதன்யம் வேறு உள்ளது என்பது புலப்படும். ஆனால் 'தான்' எனும் அது இந்த 'நான்' எனப்படும் ஜீவபாவனையால் (ego) மறைக்கப்பட்டுள்ளது. இந்த நான் யார்? எப்படி வந்தது? என்பதை தெரிந்துக்கொள்ள ஸ்ருஷ்டியை முதலில் சொல்ல வேண்டும். ஆகவே, வேதாந்த ப்ரக்ரியைகளில் (உபதேசிக்கும் முறைகளில்) முதலில் ஸ்ருஷ்டியைச் சொல்லி தற்போதுள்ள ஜீவதசை (present predicament) எப்படி வந்தது என்பதை மனது ஒத்துக்கொள்ளும்படியான*

ஒரு முறையில் (process) சொல்லப்படும். "सदेव सौम्य इदमग्र आसीत् एकमेवाद्वितीयं ब्रह्म ।" "குழந்தாய்! இது முதலில் உள்ளதாகவே (ஸத்தாகவே) இரண்டாவதில்லாத ஒன்றாகவேதான் இருந்தது." அதிலிருந்து பஞ்சபூதங்கள் உண்டாயின. அவற்றிலிருந்து உலகம் உண்டாயிற்று என்று ப்ரஹ்மமே உலகத்திற்கு முதற்காரணமாக ச்ருதியில் சொல்லப்பட்டிருக்கிறது. அந்த கருத்தையே இந்த ச்லோகத்தில் இந்த ஸகல ஜகத்தும் முதலில் ஸத்தாகத்தான் இருந்தது என்று குறிப்பிடுகிறார். அதன் அர்த்தமென்ன? ஜகத் இப்பொழுது எப்படியிருக்கிறது? நாம ரூபங்களோடு கூடியதாய் உள்ளது. குடம் எனும் ஒரு பெயர், தனி உருவம், தண்ணீர் கொண்டு வருதல் என்ற கார்யம், இவற்றையுடையதாய் இருப்பதுபோல், இப்பொழுது இந்த ஜகத் நாம ரூபகார்யத்துடன் கூடியதாய் இருக்கிறது. கேவலமாக, தனி இருப்பாக இல்லை. எப்படி குடம் முதலில் வெறும் மண்ணாக இருந்ததோ, அதைப்போல் இந்த ஜகத்தும் முதலில் "கேவல இருப்பாக" இருந்தது. ஸ்ருஷ்டிக்கு முன்னர், இப்பொழுது இருக்கும் நாமரூபத்துடன் கூடிய ஒரு பொருளாக, பதார்த்தமாக இல்லை. ஸத்தாக தனி இருப்பாக இருந்தது. நாமரூபத்துடன் கூடி இருக்கும் ஒரு பொருளாக இல்லை.

குடம் மண்ணால் செய்யப்படுகின்றது. குடம் மண்ணின் கார்யம், மண் குடத்தின் காரணம், குடம் உண்டாதலும், நிலை பெறுதலும், அழிதலும் மண்ணினிடத்துக்காணப்படுகிறது. ஆகவே மண் குடத்திற்கு உபாதானகாரணம். அவ்வாறே "இந்த பஞ்ச பூதங்கள் எதனின்று பிறக்கின்றனவோ, பிறந்தவைகள் எதனால் உயிர்வாழ்கின்றனவோ, எதனில் மீண்டும் புகுகின்றனவோ" என ச்ருதியினால் இவ்வுலகம் உண்டாதலும், நிலைபெறுதலும் அழிதலும் ப்ரஹ்மத்தினிடத்துக் கூறப்படுகிறது. ஆகவே, ப்ரஹ்மம் ஜகத்திற்கு உபாதான காரணமாம்.

குடத்தைச் செய்வதற்குக் குயவன் போல, இந்த ஜகத் ஸ்ருஷ்டிக்கு ஈச்வரனே நிமித்த காரணமாயிருக்கிறான்.

குடத்தை உண்டாக்குவதற்கு மண்ணைத்தவிர சக்கிரம், தடி முதலிய வேறு காரணங்கள் இருந்தாலும், குயவன் நிமித்த காரணம் ஆகிறான். ஜடப்பொருள்கள் சேதனப்பொருளின்றி தாமாகக் காரியப்படா. ஆதலால் ஜகத் உண்டாவதற்கு வேறு காரணங்கள் இருந்தாலும் ஈச்வரனே ஸ்ருஷ்டி செய்யும் சேதனன் என்ற முறையில் நிமித்த காரணம் ஆவான். ப்ரஹ்மமே ஜகத்திற்கு நிமித்த

காரணமாயும் உபாதான காரணமாயுமிருப்பதை சிலந்திப்பூச்சி ஜடமான தன் வாயின் எச்சில் மூலமாய் நூலுக்கு உபாதான காரணமாயும், சைதன்யாம்சத்தினால் நூல் நூற்கும் நிமித்தக் காரணமாயும் இருப்பதுபோல என்ற உவமையினால் விளக்கப் படுகின்றது.

வித்தைக்காரன் மாயையை மாத்திரம் கருவியாகக் கொண்டு யானை, குதிரை முதலியவற்றை படைப்பது போலவும், விச்வாமித்ரர் போன்ற மஹாயோகிகள் தமது இச்சையையும் கருவியாகக் கொண்டு ஸ்வர்க்கம் முதலியவற்றை படைப்பது போலவும் ஈச்வரன் தனது மாயா சக்தியையும் இச்சையையும் கருவியாகக் கொண்டு பிரபஞ்சத்தைப் படைக்கின்றான்.

எப்படி குடம் என்ற கார்யத்தை உற்பத்தி செய்யக்கூடிய சக்தியுடைய களிமண்ணிலிருந்து குடம் வந்ததோ, அவ்வாறே உலகத்தை ஸ்ருஷ்டி செய்யக்கூடிய மாயாசக்தியையுடைய பரப்ரஹ்மமாகிய ஸத்திலிருந்து, அதாவது ஈச்வரனிடத்திலிருந்து ஆகாசம், வாயு, அக்னி, ஜலம், ப்ருத்வீ (மண்) ஆகிய ஐந்தும் முறையே தோன்றின.

இப்படி ஸ்ருஷ்டி உண்டானதால், அந்த பரப்ரஹ்மத்திற்கு ஏதாவது ஹானி அல்லது குறைவு ஏற்பட்டதா என்றால் - இல்லை. ப்ரஹ்மம் எப்பொழுதும் தேசகால நிமித்தங்கட்கு அப்பாற் பட்டதாய், கயிறு பாம்பின் தோற்றத்தோடு ஒட்டற்றதாய் இருப்பதுபோல், உலகத்தோடு ஒட்டாமல் அஸங்கமாய் உள்ளது. தனக்கு எவ்விதமான மாறுதலுமின்றி ப்ரஹ்மம் ஜகத்தோற்றமாய் விளங்குகிறது. காற்று வீசி ஜலத்தில் அலைகள் தோன்றும்போது அந்த ஜலத்தின் நிலை எப்பொழுதும் ஒரே மட்டமாய் இருப்பது போல, சுத்த இருப்பாக, ''கேவல ஸத்தா மாத்ரமாக'' இருக்கும் இந்த ப்ரஹ்மத்தில் மாயை என்ற அதன் சக்தி சலனம் உண்டாக்கியதும் இந்த உலகத்தோற்றம் ஏற்படுகிறது.

அந்த ஸத்திலிருந்து முதலில் ஸூக்ஷ்ம மஹா பூதங்கள் உண்டாயின எனச் சொல்லப்படுகிறது. காரணமான மண், கார்யமான குடம் இவ்விரண்டும் நாமரூபங்கள் உடையவனாய் இருப்பதால் மண்ணிலிருந்து குடம் உற்பத்தியானதை ஒப்புக் கொள்கிறோம். ஆனால் நாம ரூபமற்ற ''கேவல ஸத்'' திலிருந்து நாமரூபமுள்ள ஜகத் எப்படி உண்டாயிற்று என்ற வினா எழும்.

அதனால்தான் ஜகத் மாயையினால் வந்தது என்கிறோம். மாயை என்பது ஈச்வரனின் சக்தி, அது ஈச்வரனைவிட வேறான ஒன்று இல்லை. ஸாங்கியர்கள் கொள்கையில்தான் ப்ரதானம் என்பதைத்தனிப் பொருளாகவும் சேதனமான புருஷன் வேறு என்றும் கூறுவர். ஆனால் வேதாந்திகளின் கொள்கையில், மாயை என்பது ஈச்வரனின் (அவனிடத்திலிருந்து) வேறற்ற அபின்னமான சக்தி. ஜலத்தின் உள்ளடங்கிய ஸ்வபாவமாக (inherent nature) முன்னர் இல்லாத அலைகள் எப்படி காற்றுவீச்சினால் உண்டாகின்றனவோ, அவ்வாறே நாம ரூபமற்ற ஸத்திலிருந்து, மாயா சக்தியினால் நாமரூபத்தைக்கொண்ட ஜகத் தோன்றுகிறது. மாறுதல் அடையாத சலனமில்லாத ஜலத்தில் மாறுதலையுடைய அலைகள் தோன்றி மறைகின்றன போல, ஜகத்தும் ப்ரஹ்மத்தில் தோன்றி, விளங்கி, மறைகிறது.

सूक्ष्माख्यभूतगतसत्वरजस्तमोभि-
लिङ्गं शरीरमुदभूदत ईश्वरेच्छा ।
पञ्चीचकार वियदादिकभूतसूक्ष्मा-
ण्यण्डं प्रभूदत इदं सह जीवभोग्यैः ॥५॥

ஸூக்ஷ்மாக்யபூதகத ஸத்வரஜஸ் தமோபிர்
லிங்கம் ஶரீரமுத பூத த ஈஶ்வரேச்சா ।
பஞ்சீசகார வியதாதிக பூத ஸூக்ஷ்மாண்
யண்டம் ப்ரபூதத இதம் ஸஹ ஜீவபோக்யை: ॥5॥

**5. பொழிப்புரை**

ஸூக்ஷ்மமெனப்படும் பஞ்ச மஹாபூதங்களின் ஸத்வ, ரஜஸ், தமோ குணங்களினால் ஸூக்ஷ்ம (லிங்க) சரீரம் உண்டாயிற்று. ஈச்வரனது இச்சை ஆகாயம் முதலிய ஸூக்ஷ்ம பூதங்களை பஞ்சீகரணம் செய்யவே, ஜீவர்களின் போக்ய பதார்த்தங்கள் அவைகளின் ஆதாரமான "இது" எனப்படும் ஜகத்தும் (ப்ரஹ்மாண்டம்) உண்டாயிற்று.

**விளக்கம்**

(கர்த்தா, போக்தா என்று தன்னைக்கருதி செயல்படும்) ஜீவர்களின் போகத்திற்காக ஈச்வரனின் ஸ்ருஷ்டியைக் கூறுகிறார்.

தமோகுணத்தை அதிகமாகக் கொண்ட முக்குண வடிவுடைய ப்ரக்ருதியினின்று இந்த ஐந்து ஸூக்ஷ்மமெனப்படும் மஹாபூதங்கள் முதலில் உண்டாயின. இந்த ஐந்து ஸூக்ஷ்ம மஹாபூதங்களில் ஸத்வ ரஜஸ் தமோகுணங்கள் இருக்கின்றன. அவற்றிலிருந்து ஸூக்ஷ்ம சரீரம் அதாவது ஐந்து ஞானேந்திரியங்கள், ஐந்து கர்மேந்திரியங்கள், ஐந்து பிராணன்கள், மனது, புத்தி, ஆகிய 17 தத்வங்கள் கொண்ட ஸூக்ஷ்ம சரீரம் உண்டாயிற்று. இதற்கு லிங்கசரீரம் என்ற பெயருமுண்டு.

(குறிப்பு: ஐந்து ஸூக்ஷ்ம மஹாபூதங்களின் ஐந்து ஸத்வாம்சங்களிலிருந்து காது, தோல், கண், நாக்கு, மூக்கு என்ற ஐந்து ஞானேந்திரியங்கள் உண்டாயின).

ஐந்து ஸூக்ஷ்ம மஹாபூதங்களின் ஸத்வாம்சங்கள் எல்லாம் ஒன்று சேர்ந்து அந்தக்கரணம் (உள் கருவி) உண்டாகிறது. அந்தக்கரணம் ஆலோசனை செய்யும் தன்மையுடன் இருக்கும்போது மனஸ் எனப்படும். அதுவே தீர்மானம் செய்யும் தன்மையுடையதாய் இருக்கையில் புத்தி எனக்கூறப்படுகிறது.

ஐந்து ஸூக்ஷ்ம மஹாபூதங்களின் ரஜோ அம்சங்களிலிருந்து வாக்கு, கை, கால், பாயு, உபஸ்தம் எனப்படும் ஐந்து கர்மேந்திரியங்கள் ஏற்பட்டன.

இந்த ஞானேந்திரியங்களும் கர்மேந்திரியங்களும் ஸூக்ஷ்ம மானவை, ஸ்தூலசரீரத்திலுள்ள காது முதலிய மாம்ஸ பிண்டங்கள் அல்ல. அவற்றின் மூலம் இயங்கும் ஸூக்ஷ்ம இந்திரியங்களே இங்கு குறிப்பிடப்படுகின்றன.

இந்த ஐந்து ஸூக்ஷ்ம மஹாபூதங்களின் ரஜோ அம்சங்கள் எல்லாம் ஒன்று சேர்ந்து பிராணன் உண்டாகிறது. அது செயல்படும் வித்யாஸத்தினால் ஐந்து விதமாகிறது. அவைகளே பிராணன், அபானன், ஸமானன், உதானன், வ்யானன் என்பவை. வெளியே மூச்சை விடுவது பிராணன்; உள்ளே மூச்சு இழுப்பது அபானன்; அன்னரஸத்தை அந்த அந்த உறுப்புகளுக்கு கொண்டுபோய் சேர்ப்பது ஸமானன்; மேலே கிளம்புவது உதானன்; சரீரம் முழுவதும் வியாபித்திருப்பது வியானன். தும்மல், கொட்டாவி, ஏப்பம், விக்கல்

முதலிய காரியங்கள் இவ்வைந்துக்குள் அடங்கியவை.

ஸூக்ஷ்ம சரீரத்தில் போகத்திற்கு வேண்டிய கருவிகள் மட்டுமே சேர்ந்துள்ளன. இந்த கரணங்களை மாத்திரம் கொடுத்தால் போதுமா? இவைகள் இருந்து செயல்பட ஒரு இடம் வேண்டாமா? பஞ்சமஹாபூதங்கள் ஸூக்ஷ்ம தசையில் இருந்தால் அவைகளை அனுபவிக்கமுடியுமா? அதனால் ஜீவர்களுக்கு ஸ்தூல சரீரங்களைக் கொடுப்பதுடன் போக்ய பதார்த்தங்களையும் அவரவர்களுக்குத் தக்கவாறு ஸ்தூலமாக்கிக் கொடுக்க வேண்டியதும் அவசியமாகிறது. அந்த ஈச்வரனின் இச்சையால் இந்த ஸூக்ஷ்ம மஹாபூதங்கள் பஞ்சீகரணம் செய்யப்பட்டு, ஸ்தூல மஹாபூதங்களாயின. ஸூக்ஷ்ம மஹாபூதங்களில் ஒவ்வொன்றிலும் அதன் அதன் சொந்தகுணம் மட்டுமே இருக்கும். மற்ற பூதங்களின் குணங்கள் இராது. ஸூக்ஷ்ம பூதமாகிய ஆகாசத்தில் அதனுடைய குணமாகிய சப்தம் மட்டும்தான் இருக்கும். மற்ற ஸூக்ஷ்ம பூதங்களின் குணங்களாகிய ஸ்பர்சம் முதலியவை இருக்காது. ஆகவே, இந்த ஸூக்ஷ்ம மஹாபூதங்களை பஞ்சீகரணம் செய்தார் என்கிறார். பஞ்சீகரணம் என்றால் என்ன? ஐந்து ஸூக்ஷ்ம பூதங்கள் ஒன்றொன்றிலிருந்து, அதில் பாதியை அதனிடத்திலேயே வைத்துக்கொண்டு மீதியுள்ள பாதியை ஸமமாக, 1/8 பாகம் பாகமாக நான்காகப் பிரித்து, மற்ற நான்கு ஸூக்ஷ்ம மஹாபூதங்களின் ஒவ்வொன்றின் முதல் பாதி பாகத்துடன் முறையே பங்கிட்டுக்கொடுப்பதே பஞ்சீகரணம் ஆகும். ஐந்து கடைக் காரர்கள் ஒவ்வொருவரும் ஒவ்வொரு சரக்கு மாத்திரம் வைத்துக் கொண்டிருந்தனர். பிறகு ஒவ்வொருவரும் தன்னிடம் இருக்கும் சரக்கில் பாதிபாகத்தை வைத்துக்கொண்டு, மீதி பாதிபாகத்தை நான்கு கடைக்காரர்களுக்கும் ஸமமாக பங்கு கொடுத்து பலசரக்குக்கடை என்று வைத்துக்கொள்வது போல.

அதாவது ஸூக்ஷ்மமாகிய ஆகாச பூதத்தில் சரிபாதி, வாயுவில் அரைக்கால், தேஜஸ்ஸில் அரைக்கால், அப்புவில் (ஜலம்) அரைக்கால், ப்ருத்வீயில் (மண்) அரைக்கால், இவ்வளவையும் சேர்த்தால் ஒரு ஸ்தூல பூதமான ஆகாசம் ஏற்படும். இதற்குள்ளேயே ஐந்து பூதங்களும் இருப்பதால் பஞ்சீக்ருதம் என்றும், ஆகாச அம்சம் அதிகமாயிருப்பதால் (பாதியாயிருப்பதால்), ஸ்தூல ஆகாசம் என்றும் சொல்லப்படுகிறது. இந்த முறையிலேயே மற்ற நான்கு ஸ்தூல பூதங்களும் ஏற்படுகின்றன.

இவ்விதமாய் பஞ்சீக்ருதமான ஸ்தூல பூதங்களைக் கொண்டு ஈச்வரன் ஸ்தூல சரீரங்களையும், போக்ய பதார்த்தங்களையும்

*அவைகளுக்கு ஆதாரமான ஜகத்தையும் (லோகங்களையும்) ஸ்ருஷ்டி செய்கிறார். ஸ்தூல சரீரத்தை ''போக ஆயதனம்'' (கர்மபலனை அனுபவிப்பதற்கான இருப்பிடம்) என்றும், ஸூக்ஷ்ம சரீரத்தை ''போககரணம்'' (அனுபவிப்பதற்காக இயங்கும் ஸூக்ஷ்ம கருவிகள்) என்றும், ஸ்தூல ஜகத்தை, ''போகப்ரதா'' (கர்மபலனான போகத்தை அளிப்பவர்) என்றும் கூறுவார்கள்.*

*ஆகவே, ஸூக்ஷ்ம மஹா பூதங்களிலிருந்து ஸூக்ஷ்ம சரீரங்களும், ஸூக்ஷ்ம பூதங்களை பஞ்சீகரணம் செய்வதன் மூலம் ஸ்தூலமாகும் ஸ்தூல பூதங்களிலிருந்து ஸ்தூலசரீரங்களும் ஸ்தூல ஜகத்தும் ஸ்ருஷ்டியாயின.*

*ப்ரக்ருதி ஜடமென்ற காரணத்தினால், தானாக உற்பத்தி ஆக முடியாது. எனவே 'ஈச்வரனது இச்சையினால்' என்று கூறுகிறார். ஈச்வரனுக்கு ஸ்ருஷ்டி செய்வதினால் எந்தவிதமான சொந்த பிரயோஜனமும் கிடையாது. ஆகவே, ஸ்ருஷ்டியின் உத்தேசம் ஜீவர்களின் புண்ணிய பாபங்களின் பலனாகிய ஸுகதுக்கங்களை அவரவர்களுக்குக் கொடுப்பதற்காகவேதான். இதை ''ஜீவர்களின் போகத்திற்காக'' என்று குறிப்பிடுகிறார்.*

सृष्ट्वा जगत्सकलमेवमशेषकर्ता
तत्प्राविशत्पुनरुपागतजीवभावः ।
विस्मृत्य सत्यसुखबोधमयस्वरूपं
भ्रान्त्या भ्रमत्यनिशमस्तविवेकलेशः ॥६॥

ஸ்ருஷ்ட்வா ஜகத்ஸகலமேவ மஶேஷகர்தா
தத் ப்ராவிஶத் புனருபாகத ஜீவபாவ:।
விஸ்ம்ருத்ய ஸத்யஸுக போத மயஸ்வரூபம்
ப்ராந்த்யா ப்ரமத்யனிஶமஸ்தவிவேகலேஶ: ॥6॥

***6. பொழிப்புரை***

எல்லாவற்றிற்கும் கர்த்தாவாகிய ஈச்வரன் எல்லா உலகையும் படைத்து அதனுள் பிரவேசித்தார். (நுழைவதுபோல் ஊடுருவி

நிறைவாய் நின்றார்). (முக்குண வடிவமான ப்ரக்ருதி என்னும் அவித்யைக்கு வசப்பட்டதும், ப்ரஹ்மத்தின் ப்ரதிபிம்பத்தைக் கொண்டதுமான) ஜீவ பாவத்தையடைந்து, ஸத்ய, ஆனந்த சின்மயமான தனது ஸ்வருபத்தை மதிமயக்கத்தினால் நன்கு மறந்து, விவேகத்தின் சிறு லேசமுமற்றவனாய், இடைவிடாமல் அலைகின்றான்.

**விளக்கம்**

*இதுவரை பூதஸ்ருஷ்டி (ஜடஸ்ருஷ்டி) சொல்லப்பட்டது. ஜீவனை (போக்தாவை) ஸ்ருஷ்டி செய்வதைச் சொல்ல வேண்டும். எல்லாவற்றையும் ஸ்ருஷ்டிக்கும் ஈச்வரன், இவ்விதம் எல்லா ஜடபிரபஞ்சங்களை ஸ்ருஷ்டி செய்து, அவற்றினுள் புகுந்தார். அப்படி புகுந்து, பிரதிபலிக்கும் தன்மையுடைய ஸூக்ஷ்மசரீரங்களில் பிரதிபலித்து ஜீவர்கள் ஆனார். ஜீவபாவத்தை அடைந்தார். அதாவது ஸ்வயம்ப்ரகாசமாயுள்ள ப்ரஹ்ம சைதன்யம், அதன் பிரதிபிம்பத்தை வாங்கக்கூடிய தகுதியுடன் தெளிவாயுள்ள ஸூக்ஷ்ம சரீரம், அதில் பிரதிபிம்பித்திருக்கும் சைதன்யத்தின் தோற்றம் - ஆக மூன்றும் சேர்ந்ததுதான் ஜீவன் எனப்படுகிறது. அவ்வாறு ஜீவபாவத்தை யடைந்தவுடன் தனது உண்மையான ஸத், சித் ஆனந்த ஸ்வரூபத்தை நன்கு மறந்து, பிராந்தியினால் (மதிமயக்கத்தினால்) விவேகமும் அஸ்தமிக்கவே, சிறிதும் விவேகமின்றி, இடைவிடாமல் ஸம்ஸாரச் சுழலில் சிக்கி சுற்றிக்கொண்டிருக்கிறான்.*

*இப்படி ஸ்ருஷ்டியைப் பற்றி உபதேசிப்பதால் என்ன லாபம்? அந்த ஸத், சித், ஆனந்த ஸ்வரூபம் நமக்குள்தான் இருக்கிறது என்று நமக்குத் தெரிகிறது. நமது உண்மையான ஸ்வரூபம் அதுதான். அதன் ஞாபகமேயில்லாமல் நமது கரணங்களாகிய ஸூக்ஷ்ம சரீரத்துடனும், இருப்பிடமாகிய ஸ்தூல சரீரத்துடனும் நமது ஸ்வரூபத்தை ஒன்றாக்கிக் கொண்டு, அவற்றை நமது ஸ்வரூபமாக நினைத்து, 'நான் கர்த்தா' போக்தா' என்று அக்ஞானத்தினால் எண்ணிக் கொண்டு, ஆசையினால் தூண்டப்பட்டு செயல்களில் ஈடுபட்டு, அவற்றின் பலன்களை அனுபவிக்க ஜன்மங்கள் எடுத்துக்கொண்டு திண்டாடுகிறோம். மேல் உலகத்திற்குச் சென்றும் கீழ் உலகத்திற்கு திரும்பி வருவதுமாய் பல சரீரங்களில் பிறப்பெடுத்துக்கொண்டு சுற்றிக் கொண்டிருக்கிறோம்.*

इत्थं प्रमादवशतः परिमुह्यमानो
देहात्मबुद्धिपरिकल्पितकर्मबन्धः ।
स्वर्गादिभोगगमनागमनातिखिन्नो
लूतावदेष भवमभ्यगमच्चिदात्मा ॥७॥

இத்தம் ப்ரமாத வஶத: பரிமுஹ்யமானோ
தேஹாத்மபுத்தி பரிகல்பித கர்மபந்த: ।
ஸ்வர்காதி போக கமனாகமனாதி கின்னோ
லூதாவதேஷ பவமப்யகமச் சிதாத்மா ॥7॥

### 7. பொழிப்புரை

இவ்வாறு இந்த சிதாத்மா ப்ரமாதத்திற்கு (கவனக்குறைவால் ஏற்படும் பிழைக்கு) வசமானவனாய், நன்கு மோஹிக்கப்பட்டு, (தானே கூட்டை உண்டாக்கி அதில் சிறையுறும்) பட்டுப் பூச்சிபோல், தேஹமே ஆத்மா என்ற (தவறான) புத்தியினால் செவ்வனே கற்பிக்கப்பட்ட கர்மத்தளைகளைக் கொண்டவனாய், ஸ்வர்க்காதி லோகங்களுக்குப் (போகத்திற்கு) போவதும் (மீண்டும் இவ்வுலகத்திற்கு திரும்பி) வருவதுமாய், துயருற்று (ஜனனமரணமெனும்) ஸம்ஸாரத்தையடைந்தது.

**விளக்கம்**

*''ப்ரமாதம்'' என்பது மறந்துபோய், அதனால் தப்பான கார்யத்தைச் செய்தல். கவனக்குறைவால், ஸ்வரூப அனுஸந்தானத்திலிருந்து நழுவுதல் என்று சொல்லலாம். ''ஸனத்ஸுஜாதீயம்'' என்ற க்ரந்தத்தில் ஸனத்ஸுஜாதீயர் விதுரருக்கு உபதேசம் அருளுகிறார். ''எல்லோரும் ஸம்ஸாரத்திற்கு காரணம் ''அவித்யை'' என்பார்கள். அப்படி நான் சொல்லவில்லை. "प्रच्युति:" நழுவுதல் தான் காரணம்'' என்கிறார். நாம் செய்யவேண்டிய ஒரே கார்யமாகிய ஸ்வரூப அனுஸந்தானத்திலிருந்து நழுவுதல். இந்த விதமாய், ப்ரமாத வசத்தினால் - பிழையினால், கவனக் குறைவினால் ''நான் இந்த தேஹம் தான்'' என்று நினைத்து செயல்படுகிறான். சுத்த சைதன்யமாக இருக்கும் தன் ஸ்வரூபத்தை மறந்து தேஹத்தோடு ஒன்றிக்கொண்டு ஆத்மா அல்லாத தேஹத்தில் ''இந்த தேஹமே நான்'' என்ற தவறான எண்ணம் ஏற்படுவதே இவனுக்கு பந்தமாகும்,*

தளையாகும். கவனக்குறைவால் ஸ்வரூபப்ரக்ஞையிலிருந்து நழுவுவதால் மோஹம், அதனால் அஹங்காரம், இந்த பந்தத்தால் துன்பம், இவ்வாறு கர்மாவினால் கட்டப்பட்டவனாகிவிட்டான். கர்மாவில் ஈடுபாடு ஆசையினால் ஏற்படுகிறது. காமம், ஆசை எப்பொழுது உண்டாகும்? தன்னை என்றும் நிறைந்த பரிபூர்ணனாக அறியாமல் அவித்யையினால் ஏதோ குறைவுள்ளவனாக நினைத்து அவ்வாறு minimise பண்ணிக்கொள்வதால் வரும். ஸ்வரூபத்தை மறத்தலாகிய குற்றம் மனிதனை வெளிநோக்குடையவனாகச் செய்து விஷயங்களில் பற்றை ஏற்படுத்தி, வெகுதூரம் நிலைதவறச் செய்கிறது. ஸனத்ஸுஜாதர் த்ருதராஷ்ட்ரனுக்கு இவ்வாறு கூறுகிறார்:

"ஞானிகள் மயக்கத்தை ம்ருத்யுவாகக் கொள்கிறார்கள். நானோ, தடுமாற்றத்தையே ம்ருத்யுவாகச் சொல்லுகிறேன். எப்போதும் தடுமாற்றமின்மையை சாகாமையாகக் கூறுகிறேன்" (ஸனத்ஸுஜாதீயம் II-4) இதற்கு ஸ்ரீ சங்கரரின் பாஷ்யம் கீழ்வருமாறு:

"ஆத்மா அல்லாத உடம்பு முதலியவற்றை ஆத்மாவாகக் கொள்ளுதல் எதுவோ, அதுவே, அந்தப் பொய் உணர்வே ம்ருத்யு என்று அறிஞர்கள் கருதுகிறார்கள். என் கருத்தோ அப்படியன்று. மற்றென்னவெனில், கவனித்தலின்மையே, தடுமாற்றமே (ப்ரமாதம்) ஆத்ம இயல்பான ப்ரஹ்ம நிலையினின்று பிறழ்தலே, தன் நிலையினின்றும் தவறுதலே ம்ருத்யு எனக் கூறுகிறேன். இந்தத் தவறானது கீழ்க் கூறிய பொய்யுணர்விற்கும் காரணமாய், ஆத்மா இன்னதென அறியாத அஞ்ஞானமாம். இந்த அஞ்ஞானமே பிறப்பிறப்பு முதலிய எல்லா அனர்த்தங்களையும் விளைவிக்கின்ற ம்ருத்யு என்க. இனி தானாய் தன்நிலையாய், ஆனந்த அறிவான ப்ரஹ்ம நிலையாய் நிற்றலென்பது சாகாமை எனக் கூறுகின்றேன்."

புண்ணியத்தை ஸம்பாதித்து ஸ்வர்க்கம் செல்கிறான். அங்கு புண்ணியம் முடிந்ததும் மீண்டும் பூலோகத்திற்கு வந்து விடுகிறான். மறுபடியும் புண்ணிய பாபங்களைச் செய்து ஸ்வர்க்கம் முதலிய லோகங்களுக்குப் போவதும் வருவதுமாய் இருக்கிறான். "ஏன் இவ்வாறு கர்மாக்களைப் பண்ணி பிறப்புக்களை எடுக்கிறாய்"? என்று கேட்டால் "பிறக்கிறது இயற்கை. எல்லோரும் தான் பிறக்கிறார்கள். பிறப்பதும் இறப்பதும் இயற்கைதானே. ஏன் வீணாக வேதாந்தம் படிக்க வேண்டும்?" என்பான். இவ்வாறு பல ஜன்மங்கள் எடுத்தெடுத்து இளைத்து களைத்த பின்புதான் "ஏன்

இப்படி பிறந்து இறந்து திண்டாடுகிறோம்? வேறு வழி யில்லையா?'' என்று சிந்தனையடைகிறான். எப்படி பட்டுப்பூச்சி ('லூதம்' என்றால் பூச்சி) தன் வாயிலிருந்து வரும் பசையினாலேயே நூல்கள் இழைத்துத் தானே கூட்டைச்செய்து, அதிலேயே உணவு உட்கொண்டு, கட்டுண்டு கடைசியில் அதிலேயே சிக்கி மடிவது போலவே, தனது ஸ்வரூபமாகிய சிதாத்மாவை மறந்து, பொய்யான இந்த உடலே ஆத்மா என்ற தப்பான எண்ணத்தால் ஆசை ஏற்பட்டு, அதனால் தூண்டப்பட்டு கர்மாவில் ஈடுபட்டு ஸம்ஸாரக் கடலில் மூழ்கிவிடுகிறான். 'நான் தேஹம்' என்ற தவறான புத்தி வரவில்லை என்றால், இந்த கஷ்டமெல்லாம் இந்த சிதாத்மாவை தனது ஸ்வரூபமாகக் கொண்டுள்ள ஜீவனுக்குக்கிடையாது. தேஹத்தோடு தன்னை ஒன்றாக்கிக் கொண்டு ''நான் கர்த்தா, நான் ஸுகீ, நான் துக்கீ'' ஐந்து பெண்கள் பெற்றேன். நான்கு பெண்களுக்குக் கல்யாணம் ஆகிவிட்டது. இப்பொழுது வேலையிலிருந்து ஓய்வு எடுத்துக்கொண்டு விட்டேன். இன்னும் சில வருஷங்கள் நான் இருக்கலாம் என்று நினைக்கிறேன்.'' என்றெல்லாம் சொல்லிக் கொண்டிருக்கிறான். இவ்வாறு உண்மையில் எப்பொழுதும் சிதாத்மாவாகவே இருக்கும் இந்த மனிதன் தவறான எண்ணத்தால் கர்மத்தளையில் கட்டுண்டு, வினைப்பயனை புசித்துக்கொண்டு, திண்டாடிக்கொண்டு இருக்கிறான்.

मायायुतस्त्वगमदीश्वरतां चिदात्मा
चाविद्यया युगभवद्धृतजीवभाव ।
माया भवेद्विमलसत्वगुणप्रधाना
प्रोक्ता मलापिहितसत्वगुणा त्वविद्या ॥८॥

மாயா யுதஸ்த்வகமதீ ஶ்வரதாம் சிதாத்மா
சாவித்யயா யுகபவ த்ப் ருத ஜீவபாவ ।
மாயா பவேத்விமல ஸத்வகுண ப்ரதானா
ப்ரோக்தா மலாபிஹிதஸத்வகுணா த்வவித்யா ॥8॥

**8. பொழிப்புரை**

விமலமான (சுத்தமான) (ரஜஸ்தமோ குணங்களால் மலினப்படாத) ஸத்வகுணப்ரதானமான முக்குண ப்ரக்ருதியே மாயையாகும்; மலத்தினால் மூடப்பட்ட ஸத்வகுணத்துடன் கூடிய (ரஜஸ்தமோ குணங்கள் மேலிட்டு ஸத்வம் அடங்கியுள்ள) ப்ரக்ருதியே அவித்யையெனப்படும். சிதாத்மா (தனது ஸ்வாதீனத்தில் உள்ள) மாயையுடன் கூடியவராய் ஈச்வரத்தன்மையை அடைந்தது. அவித்யையுடன் கூடி (அதன் வசப்பட்டதாய்) ஜீவபாவத்தைப் பெற்றவனாகிவிட்டது.

**விளக்கம்**

*அக்ஞானத்தால் ஜீவன் அடையும் அவலமான நிலையைக் கூறியபின், ஜீவனுடைய உபாதி, ஈச்வரனுடைய உபாதி இரண்டையும் விளக்குகிறார்.*

*சிதாத்மா முதலில் மாயையுடன் கூடியதாக, ஈச்வரனாக ஆகியது. அதே சிதாத்மா அவித்யையை உபாதியாகக் கொண்டு ஜீவபாவத்தை உடையவனாக ஆகிறது.*

*தமஸ், ரஜஸ், ஸத்வம் என்ற மூன்று குணங்களுடைய ப்ரக்ருதி இரண்டுவிதம். ரஜஸ்தமோ குணங்களினால் அழுக்குப் படாமல் சுத்த ஸத்வகுணமாயுள்ளது மாயையெனப்படும். சித்ஸ்வரூபமான ப்ரஹ்மம் அந்த மாயையில் பிரதிபலித்து, அந்த மாயையை ஸ்வாதீனத்தில் வைத்துக்கொண்டு ஸர்வக்ஞராகிய ஈச்வரனாகிறது.*

*ரஜோகுணமும் தமோகுணமும் மேல்பட்டு ஸத்வம் அடங்கியிருக்கும் போது, அதே ப்ரக்ருதி அவித்யையெனப்படும். அதே சித்ஸ்வரூபமாகிய ப்ரஹ்மம் இந்த அவித்யையுடன் கூடியிருக்கும்போது அந்த அவித்யைக்கு வசமாகி, கிஞ்சித்ஞனாகிய (சிற்றறிவுடைய) ஜீவபாவத்தை அடைகிறது. இந்த ஜீவன் தனது உண்மை ஸ்வரூபத்தை மறந்து, ஆசையினால் செயல்புரியும் கர்த்தாவாக தன்னைக்கருதி செயலில் ஈடுபட்டு, கர்மாவின் பயனாகிய புண்ணிய பாபங்களால் சுகதுக்கங்களை விருப்பு வெறுப்புகளுடன் அனுபவித்துக் கொண்டு பிறப்பு இறப்பு எனும் சுழலில் சிக்கி அவதியுறுவதை முன்னர் சொல்லியாகிவிட்டது. நாம் ஜீவபாவனை கொண்டிருப்பதால், ஜீவனைப்பற்றி மேலும் சொல்லுகிறார்.*

एकोऽप्यनेक इव भाति शरीरभेदा-
दात्मा घटादिगतभेदवशाद्वियद्वत् ।
देहेन्द्रियादिषु चलत्सु निजप्रकाशा-
त्पूर्णोऽपि निश्चलतरोऽपि विकारवद्वत् ॥९॥

ஏகோ அப்யனேக இவபாதி ஶரீர பேதா
தாத்மா கடாதிகத பேதவஶாத் வியத்வத் ।
தேஹேந்த்ரியாதிஷு சலத்ஸு நிஜப்ரகாஶாத்-
பூர்ணோSபி நிஶ்சலதரோSபி விகாரவத்வத் ॥9॥

**9. பொழிப்புரை**

ஒரே ஆகாசமானது குடங்கள் முதலியவற்றின் பேதம் காரணமாக, வெவ்வேறாகத் தோன்றுவதுபோல், ஆத்மா ஒன்றாயிருப்பினும் சரீரபேதத்தினால் பல போல் விளங்குகிறது. ஆத்மா ஸ்வயம் ப்ரகாசமாயிருப்பதால் பூர்ணனாகயிருந்தும், சிறிதும் அசைவற்ற தன்மையுடையதாய் இருப்பினும், தேஹேந்திரியங்கள் மாறுதல் அடையும் போது, தானும் விகாரத்திற்குட்பட்டதுபோல் தோன்றுகிறது.

**விளக்கம்**

*அந்த சிதாத்மா வேறு அற்ற ஒன்றாகவே இருந்தாலும், அவித்யையினால் ஏற்பட்ட சரீரங்களின் வித்யாசத்தினால் அநேகம் போல தோன்றுகிறது. ஆகாசமானது எங்கும் நிறைந்தது, எல்லை யற்றது. பல குடங்களை வைத்த பின்பு அந்த ஒரே ஆகாசமானது அந்த அந்த குடங்களின் அளவுகளினால் உள்ளே வரையறுக்கப் பட்டதுபோல் தோன்றுகிறது அல்லவா? ஒரே ஆகாசமானது குடங்களின் பேதத்தினால் பல கட ஆகாசங்களாகத் தோன்றுவது போல், சரீரங்களின் பேதத்தினால், ஒரே ஆத்மா பல ஆத்மாக்கள் போலத்தோன்றுகிறது. தன் ஸ்வரூபத்தால் ஸ்வயம் ப்ரகாசமாயிருப்பதால் பூர்ணமானதும் மாறுதலற்ற தன்மை யுடையதாயிருந்தும், ஆத்மா இந்த தேஹம் புத்தி முதலியவை சலனம் அடையும் போது ஆத்மாவும் விகாரத்தையுடையது போல், மாறுதலையடைந்தாற்போல் தோன்றுகிறது. ஆகாசம் எங்கும் நிறைந்த ஒன்றாய் இருந்தாலும், குடத்தை எடுத்துச் செல்லும்போது அதனுள் உள்ள ஆகாசமும் அசைவது போலவும் எடுத்துச்*

*செல்லப்படுவது போலவும் தோன்றுகிறது அல்லவா? அவ்வாறே தேஹத்தின் மாறுதல்கள் ஆத்மாவிலும் உள்ளதுபோல் தோன்றுகிறது.*

एवं भवार्णवनिमज्जनदुःखितेषु
लोकेषु पूर्वजनिसंचितपुण्यपुञ्जैः ।
कश्चिद्विशुद्धमतिरेत्य गुरुं कृपाब्धिं
प्राह प्रणम्य भवसागरलङ्घनेच्छुः ॥१०॥

ஏவம் பவார்ணவ நிமஜ்ஜன து:க்கிதேஷு
லோகேஷு பூர்வஜனி ஸஞ்சித புண்ய புஞ்ஜை: ।
கஶ்சித் விஶுத்தமதிரேத்ய குரும் க்ருபாப்திம்
ப்ராஹ ப்ரணம்ய பவஸாகர லங்கனேச்சு: ॥10॥

***10. பொழிப்புரை***

இவ்வாறு பவ (ஜனன மரண) மெனும் ஸமுத்திரத்தில் மூழ்கி துக்கத்தையடைந்த ஜனங்களில், பூர்வ ஜன்மங்களில் ஈட்டிய புண்ணியக் குவியல்களின் காரணமாய், சித்த சுத்தியையடைந்த யாரோ ஒருவன் ஸம்ஸாரஸாகரத்தைத் தாண்ட விரும்பிய வனாய், கருணைக்கடலாகிய குருவை நமஸ்கரித்துக் கூறினான்.

**விளக்கம்**

*ஜீவ பாவத்தைப் பற்றிக் கூறியாகிவிட்டது. ஆகவே இந்த ஜீவன் தனது உண்மை ஸ்வரூபமான சிதாத்மாவை மறந்து 'தேஹமே நான்' என்ற தவறான எண்ணத்துடனும், தோற்றமாகிய த்வைத ப்ரபஞ்சத்தை நிஜமென நினைத்து, ஆசையினால் செயல்புரியும் கர்த்தாவாகத் தன்னைக்கருதி, செயல்புரிந்து, கர்மாவின் பயனாகிய புண்ணிய பாபங்களால் சுகதுக்கங்களை ராகத்வேஷங்களுடன் அனுபவித்துக்கொண்டு பிறப்பு இறப்பு எனும் சுழலில் சிக்கி அவதியுறுவதையும் விவரித்துவிட்டார்.*

*இவ்விதமாக தேஹேந்த்ரியங்கள் சலனமடையும் போது, தனது ஆத்மாவும் சலனமடைவதாக ஜீவன் எண்ணுகிறான். போகத்தை உத்தேசித்து கர்மத்தைச் செய்வதும், கர்மத்தைச் செய்வதற்காக போகமனுபவிப்பதுமாய், இந்தப்பிறவிக் கடலில் மூழ்கி, துக்கமடைந்து திண்டாடும் ஜனங்களில், பூர்வ ஜன்மங்களில் சம்பாதிக்கப்பட்ட அநேக புண்ணியங்களின் காரணத்தால் சுத்தமான தெளிவான, கூர்மையான புத்தியுடையவன்* (keen and subtle intellect) *ஏதோ ஒருவன் கருணைக்கடலாகிய ஒரு குருவை அணுகி ஸம்ஸாரஸாகரத்தைத் தாண்டும் இச்சையுடன் வணங்கிச் சொன்னான்.*

*சிஷ்யனைப்பற்றி கூறியதிலிருந்து அவன் தீவிரமான முமுக்ஷுத்வம் உள்ள ஒருவன் எனத்தெரிகிறது.*

संसारघोरजलधौ भगवन्नपारे
तापत्रयौघदहने सहजारिनक्रे ।
मोहाम्भसि प्रचलदुद्भवमृत्युभङ्गे
वीक्ष्यान्तरस्मि पतितं जगदद्य भीतः ॥११॥

ஸம்ஸார **கோர** ஜலதௌ பகவன்னபாரே
தாபத்ரயௌக தஹனே ஸஹஜாரிநக்ரே ।
மோஹாம்பஸி ப்ரசலதுத்பவ ம்ருத்யு பங்கே
வீக்ஷ்யாந்தரஸ்மி பதிதம் ஜகதத்ய பீத: ॥ 11 ॥

***11. பொழிப்புரை***

பகவானே! கடக்கமுடியாததும், உடன்பிறந்த சத்ருவாகிய (அக்ஞானமும்) முதலைகளையுடையதும், தாபத்ரயமெனும் கூட்டமாகிய வாடவாக்னியினால் தஹிப்பதும், மோஹமெனும் நீரில் பிறப்பு இறப்பு என மாறி மாறி எழுந்து அடங்கும் அலைகளுடன் கூடியதுமான ஸம்ஸாரமெனும் கோரமான கடலினுள் விழுந்து உழலும் இந்த உலகத்தைக் கண்டு நான் இப்பொழுது பயந்துள்ளேன்.

**விளக்கம்**

முந்திய நான்கு ச்லோகங்களில் கூறப்பட்ட ஒரு தீவிர முமுக்ஷு ஸம்ஸாரத்திற் காணும் துக்கங்களை மீண்டும் இந்த ச்லோகத்தில் குறிப்பாக எடுத்துரைக்கிறார். ஆத்மாவின் கூடவே அவித்யையும் இருந்தது என்று ஒப்புக் கொண்டால்தான் மேலும் ஜகத்ஸ்ருஷ்டியைப் பற்றி சொல்ல முடியும். ஆகவேதான் கூடவே பிறந்த 'அக்ஞானமாகிய முதலை', என்று கூறப்பட்டுள்ளது. ஆத்மாவும், அக்ஞானமும் விரோதிகளல்ல. ஆகவேதான் கூடவே இருக்கின்றன. ஞானம்தான் அக்ஞானத்திற்கு விரோதி எனினும் அக்ஞானம் ஸ்வரூபஞானத்தை மறைத்து உலகத்தோற்றத்தை உண்மையென நினைக்குமாறு பண்ணுவதால், இங்கு அதை 'உடன் பிறந்த சத்ரு' என்று குறிப்பிடுகிறார்.

मातुः स्थितस्य जठरे वचसां च दूरं
दुःखं पुनर्जननकालभवं दुरूह्यम् ।
बाल्येऽपि दुःखमविषह्यमवारणीय-
मालोच्य भीतिरधुना महती ममोत्था ॥१२॥

மாது: ஸ்திதஸ்ய ஜடரே வசஸாம் ச தூரம்
துःக்கம் புனர்ஜனனகால பவம் துரூஹ்யம் ।
பால்யேऽபி துःக்கமவிஷஹ்யமவாரணீய
மாலோச்ய பீதிரதுனா மஹதீ மமோத்தா ॥ 12 ॥

***12. பொழிப்புரை***

தாயாரின் வயிற்றில் இருந்துகொண்டு அனுபவித்த துக்கம் சொல்லிமுடியாது. மீண்டும் பிறக்கும்போது ஏற்படும் ஸஹிக்க முடியாத கஷ்டமும், மேலும் பால்யத்திலும் பொறுக்க முடியாததும், தவிர்க்க முடியாததுமான துன்பத்தையும் நன்கு ஆலோசித்துப் பார்த்து, இப்பொழுது எனக்கு அதிகமான பயம் ஏற்பட்டுள்ளது.

तारुण्यमेत्य कुलयौवनरूपसंप-
द्विद्यात्मगर्वपिहितात्महिताभिलाषः ।
विण्मूत्रमांसरुधिरास्थिमये शरीरे
नार्या रुचिं समुपयाति जनो विचित्रम् ॥१३॥

தாருண்ய மேத்ய குலயௌவன ரூபஸம்பத் -
வித்யாத்ம கர்வபிஹிதாத்மஹிதாபிலாஷ: ।
விண்மூத்ர மாம்ஸ ருதிராஸ்திமயே ஶரீரே
நார்யா ருசிம் ஸமுபயாதி ஜனோ விசித்ரம் ॥ 13 ॥

***13. பொழிப்புரை***

வாலிபத்தை அடைந்தபோது, குலம், யௌவனம், ரூபம் (அழகு), செல்வம், வித்தை, ஆத்மகர்வம் (அஹங்காரம்) இவற்றால் ஆத்மாவிற்குகந்த நாட்டம் மறைக்கப்பட்டு, மலம், மூத்ரம், மாம்ஸம், இரத்தம், எலும்பு நிறைந்த ஸ்திரீ சரீரத்தில் ருசியை இந்த மனிதன் அந்தோ! நன்கு அடைகிறான்.

सर्वापदां निलयमेत्य वयोऽधिकत्वं
जन्तुः सुखं न लभते ह्यपि किंचिदत्र ।
पुंसामिहास्ति न भयं खलु मृत्युतोऽन्य-
द्धिक्कृत्य संसृतिमिमामभवं विरक्तः ॥१४॥

ஸர்வாபதாம் நிலயமேத்ய வயோऽதிகத்வம்
ஜந்து: ஸுகம் ந லபதே ஹ்யபி கிஞ்சிதத்ர ।
பும்ஸாமிஹாஸ்தி ந பயம் கலு ம்ருத்யுதோன்ऽயத்
திக்க்ருத்ய ஸம்ஸ்ருதிமிமாமபவம் விரக்த: ॥ 14 ॥

***14. பொழிப்புரை***

பிறகு வயது அதிகரிக்கவே, எல்லா ஆபத்துக்களின் இருப்பிடமாய் உடல் ஆகி, இந்த ஜந்து இங்கு சிறிதேனும்

சுகத்தை அடைவதில்லை. மனிதர்களுக்கு மரணத்தைக் காட்டிலும் வேறு பயம் இங்கு இல்லை. இந்த ஸம்ஸாரத்தை வேண்டாம் என்று வெறுத்து வைராக்கியம் உடைய வனாகியுள்ளேன்.

**விளக்கம்**

*பிறகு வயது அதிகரிக்கவே, எல்லா ஆபத்துக்களின் இருப்பிடமாக உடல் ஆகிறது. கண்கள், காது வேலை செய்வதில்லை. நீரிழிவுநோய் (Diabetes) வரும். இப்பொழுது இவனை ஜந்து என்று ப்ரஹ்மேந்த்ராள் குறிப்பிடுகிறார். வயதானவர்கள் வீட்டுக் காவலுக்குத்தான் பயன்படுத்தப் படுவார்கள். சிறிதும் சுகம் கிடையாது. சுகம் என்று நினைத்துக்கொண்டாலும் உண்மையில் சிறிதும் சுகம் அடைவ தில்லை அல்லவோ! அடுத்தது மரணம். மரணத்தைக்காட்டிலும் மேலான வேறுபயம் மனிதனுக்குக் கிடையாது. ஆகவே இந்த ஸம்ஸாரத்தை வேண்டாம் என்று வெறுத்து வைராக்ய முடையவனாகியுள்ளேன்.*

स्वामिन्कथं मम भवार्णवलङ्घनं स्या-
दायासलेशरहितं वद तत्र हेतुम् ।
श्रुत्वा तु शिष्यवचनं रमणीयमित्थं
प्रत्युत्तरं गुरुरदात्कृतमन्दहासः ॥१५॥

ஸ்வாமின் கதம் மம பவார்ணவ லங்கனம் ஸ்யா
தாயாஸலேஶரஹிதம் வத தத்ர ஹேதும் ।
ஶ்ருத்வா து ஶிஷ்யவசனம் ரமணீய மித்தம்
ப்ரத்யுத்தரம் குருரதாத் க்ருதமந்தஹாஸ: ॥ 15 ॥

***15. பொழிப்புரை***

"ஸ்வாமி! இந்த பவஸாகரத்தைத் தாண்டுவது எங்ஙனம்? அதற்கு சிறிதும் சிரமமில்லாத வழியை (ஹேதுவை) எனக்குக்

கூறுங்கள்'' சிஷ்யனின் இத்தகைய இனிமையான சொல்லைக் கேட்டு, குரு புன்னகை பூத்து பதில் அளித்தார்.

**விளக்கம்**

*ஸ்வாமி! இந்த பவஸாகரத்தை நான் கொஞ்சமும் சிரமமில்லாமல் தாண்டுவதற்கு வழி எப்படி என்று சொல்லுங்கள். மாத்திரையை விழுங்குவது போல் 'சடக்'கென்று முடிப்பதற்கு வழி கூறியருளுங்கள். சிஷ்யனுடைய இத்தகைய ரமணீயமான இனிதான வசனத்தைக் கேட்டு, குரு மந்தஹாஸத்துடன் பதில் கூறலானார்.*

*'நாம் வெகுநாட்களாக இப்படி ஒரு சிஷ்யனைத்தான் எதிர்பார்த்துக்கொண்டு இருந்தோம். இப்பொழுதாவது வந்து சேர்ந்தானே' என்று சிரித்துக் கொண்டார் போலும். எப்படி அர்ஜுனன் தன்னிடம் வந்து சரணாகதி செய்தபோது ஸ்ரீகிருஷ்ணர் மந்தஹாஸம் பண்ணிக்கொண்டாரோ, அப்படியேதான். மற்ற நேரமாக இருந்தால் அர்ஜுனன் இதுபோல் ஸ்ரீகிருஷ்ணனை கும்பிடுவானா?*

देहेन्द्रियासुहृदयादिकचैत्यवर्गा-
त्प्रत्यक्चितेर्विभजनं भववारिराशेः ।
संतारणे प्लव इति श्रुतिडिण्डिमोऽयं
तस्माद्विचारय जडाजडयोः स्वरूपम् ॥१६॥

தேஹேந்த்ரியாஸுஹ்ருதயாதிக சைத்ய வர்காத்
ப்ரத்யக்சிதேர்விபஜனம் பவவாரிராஶே: ।
ஸந்தாரணே ப்லவ இதி ஶ்ருதி டிண்டிமோऽயம்
தஸ்மாத்விசாரய ஜடா ஜடயோ: ஸ்வரூபம் ॥ 16 ॥

***16. பொழிப்புரை***

''தேஹம், இந்திரியங்கள், ப்ராணன், மனம் முதலிய ஜடவர்கத்திலிருந்து, உள்ளேயிருக்கும் ஆத்மாவை பிரித்தறிவதே பவஸாகரத்தை நன்கு தாண்டுவதற்கு படகு

ஆகும் என்பதே உபநிஷித்துக்களின் முழக்கமாகும். ஆகவே ஜடம், சித் இவைகளின் ஸ்வரூபத்தை விசாரிப்பாயாக''.

**விளக்கம்**

இனி குருவினுடைய உபதேசம் ஆரம்பம். முதலில் அவசியம் பண்ண வேண்டியது என்ன என்பதைக் கூறுகிறார். சிஷ்யன் ஆயாஸமில்லாமல் ஸம்ஸாரஸாகரத்தைத் தாண்ட விரும்பியதற்குத் தகுந்த இந்த ஒரு கார்யம் செய்தால் மட்டும் போதும் என்கிறார்.

தேஹம், இந்திரியங்கள், பிராணன், மனம் முதலிய ஜடவர்க்கங்களிலிருந்து உள்ளே உள்ள சைதன்யத்தைப் பிரித்துப் பார். அதாவது, அறிகிறவன், அவன் அறிவதற்கு வேண்டிய கருவிகள், அவன் குடியிருக்கும் வீடு இவையாவும் தள்ளிவிட்டு, 'நான் மனிதன்' என்பதையும் விட்டு விட்டு, இவ்வளவுக்கும் உள்ளே உள்ள சைதன்யத்தைப் பிரித்துப்பார் என்று கூறுகிறார். ''நான் மனிதன்'' என்ற எண்ணமும் ஜடவிருத்திதான். ''நான்'' என்பதே ஜடமான அந்தக்கரணத்தின் விருத்தி ரூப பரிணாமம். விருத்தி ஜடம் என்பதால், ''நான்'' என்ற பரிணாமமும் ஜடம் தான். அந்தக்கரணம் சுத்தஸத்வத்திலிருந்து உண்டானதால், அதற்குத் தெளிவு, ஸ்வச்சமாக இருக்கும் தன்மை உள்ளது. ஆகவே அதில் சைதன்யத்தின் பிரதிபலிப்பு உண்டாகிறது. அதனால் ''நான்'' என்ற அந்தக்கரண விருத்தி சைதன்யம் போல் தோற்றமளிக்கிறது. அந்த விருத்திக்கும் அடிப்படையாயுள்ளது தான் சுத்த சைதன்யமான ஆத்மா.

''இவ்விதமாக ஜடத்திலிருந்து சைதன்யத்தைப் பிரிப்பது தான் ஆயாஸமில்லாமல் ஸம்ஸாரமாகிய கடலைத்தாண்டுவதற்கு ஓடம் என்பதே ச்ருதியின் முழக்கம். ஆகவே ஜடம் என்றால் என்ன? சைதன்யம் என்றால் என்ன? எது ஜடம்? எது சைதன்யம்? என்று விசாரணை செய் என்கிறார்.

प्रत्यक्चितिर्वपुरिदं न भवेज्जडत्वा-
त्कुड्यादिवज्जडतयाप्यसवो न चित्स्युः ।

नापीन्द्रियाणि करणं कुत एव चित्स्या-
त्कुद्दालकादिवदिति प्रविचारय त्वम् ॥१७॥

ப்ரத்யக்சிதிர்வபுரிதம் ந பவேஜ்ஜடத்வாத்
குட்யாதிவஜ்ஜட தயாப்யஸவோ ந சித்ஸ்யு: ।
நாபீந்த்ரியாணி கரணம் குத ஏவ சித்ஸ்யாத் -
குத்தாலகாதிவதிதி ப்ரவிசாரய த்வம் ॥ 17 ॥

**17. பொழிப்புரை**

"இந்த (ஸ்தூல) சரீரம் சுவரைப் போன்று ஜடமாயிருப்பதால், ப்ரத்யகாத்மாவாகாது. ப்ராணன்களும் ஜடத்தன்மையினால் சித்தாவது அன்று. இந்திரியங்களும் மண்வெட்டி போன்று கருவிகள்தானே. அவை சித்தாக எப்படி இருக்கும்?" இவ்வாறு செவ்வனே நீ விசாரிக்க வேண்டும்.

**விளக்கம்**

*இந்த சரீரம் ப்ரத்யக் சைதன்யமாகாது. ஏனெனில் அது சுவர் முதலியன போன்று ஜடமாக இருக்கிறது. பிராணன்களும் ஜடமாயிருப்பதால் சைதன்யம் அல்ல. இந்திரியங்களும் கருவியாக இருப்பதால் எப்படி சைதன்யமாகும்? மண்வெட்டி முதலிய கருவிகள் எப்படி ஜடமோ, அதைப்போல அவை ஜடம்தான். இவ்வாறு நீ நன்றாக விசாரணை செய்.*

दृश्यत्वतो न मनसश्च भवेच्चितित्वं
नाहंकृतिश्च परिणामवती चितिः स्यात् ।
बुद्धेरचित्त्वमपि जन्मविनाशवत्वा-
च्चित्तं च दृश्यमचिदित्यनुचिन्तय त्वम् ॥१८॥

த்ருஶ்யத்வதோ ந மனஸஶ்ச பவேச் சிதித்வம்
நாஹம்க்ருதிஶ்ச பரிணாமவதீ சிதி: ஸ்யாத் ।

புத்தேரசித்வமபி ஜன்ம விநாசவத்வாச்-
சித்தம் ச த்ருஶ்யமசிதித்யனுசிந்தய த்வம் ||18||

**18. பொழிப்புரை**

"பார்க்கப்படும் பொருளாகயிருக்கும் மனதிற்கும் சித்தா யிருக்கும் தன்மை இல்லை. அஹங்காரமும் மாறுதலுக்கு உட்படுவதால், சித் ஆகாது. புத்திக்கும் தோன்றி அழியும் தன்மையுடையதால் அசித், அதாவது ஜடமேயாம். சித்தமும் த்ருச்யம் (பார்க்கப்படும் பொருள்), ஆகவே ஜடம் என்று மீண்டும் விசாரம் செய்வாயாக."

**விளக்கம்**

*பார்க்கப்படும் பொருளாய் (object) இருக்கும் தன்மை யுள்ளதால் மனதிற்கும் சித்தாய் இருக்கும் தன்மை கிடையாது. "நான்" என்கிற கர்த்தாவாகிற அஹங்காரமும் பரிணாமத்தை (மாறுதலை)யுடையதாகயிருப்பதால் சைதன்யம் ஆகாது. அஹங் காரமும் அந்தக்கரண விருத்தி ரூப பரிணாமம் தானே. மேலும் நல்ல தூக்கத்தில் இந்த அஹம்புத்தி இல்லாமல் போகிறது அல்லவா? ஆகவே அஹங்காரம் பரிணாமத்தையுடையது என்பது நன்கு தெரிகிறது. நிச்சயாத்மிகா புத்தியும் தோன்றி அழிவு யடைவதால், அது அசித், ஜடம் தான். சித்தமும் நம்மால் அறியப்படுவதால் அதுவும் அசித். இவ்வாறு மீண்டும் மீண்டும் தொடர்ந்து சிந்தித்துப்பார்.*

*மனஸு¬ம் சித்தமும் ஒரே வர்க்கத்தைச் சேர்ந்ததால், அவை இரண்டிற்கும் "அறியப்படுபவை" என்ற காரணத்தைக் கூறி ஜடத்வம் சொல்லப்பட்டது. அஹங்காரமும் புத்தியும் ஒரே வர்க்கத்தைச் சேர்ந்ததால் அவை இரண்டிற்கும் மாறுதல் அடைபவை என்ற காரணம் கூறி ஜடத்வம் நிருபிக்கப்பட்டது.*

*எதை எதையெல்லாம் நீ என்னிடம் பார்க்கிறாயோ, அவையெல்லாம் ஜடம்தான். என்னிடம் பார்க்கப்படும் பொருள் ஆகாத வஸ்து ஒன்று இருக்கிறது. அது மாறுபாடு அடையவே அடையாது. மற்றவையெல்லாம் மாறுதலுக்கு உட்படும். உன்னிடமும் அதே வஸ்து உள்ளது. உண்மையாக எப்பொழுதும் நிலையாகவுள்ள வஸ்து அது ஒன்றுதான். அது ஒன்று இருப்பதால் தான், ஜடமாக இருக்கிற நீ என்னைப் பார்க்கிறாய்.*

बुद्ध्वा समस्तमपि दृश्यमचित्स्वरूपं
प्रत्यक्चितिं च निजरूपतया विदित्वा ।
देहेन्द्रियाद्यखिलसाक्ष्यहमित्यजस्रं
संचिन्तय व्यपगताखिलसंशयः सन् ॥१९॥

புத்த்வா ஸமஸ்தமபி த்ருஶ்யமசித்ஸ்வரூபம்
ப்ரத்யக்சிதிம் ச நிஜரூபதயா விதித்வா ।
தேஹேந்த்ரியாத்யகில ஸாக்ஷ்யஹமித்யஜஸ்ரம்
ஸஞ்சிந்தய வ்யபகதாகிலஸம்ஶய: ஸன் ॥19॥

***19. பொழிப்புரை***

பார்க்கப்படும் பொருள் எல்லாம் அசித் (ஜடம்) வடிவமே என்று உணர்ந்து, உள்ளே உறையும் பேரறிவை தனது ஸ்வரூபமென அறிந்து, தேஹம், இந்திரியங்கள் முதலிய வற்றிற்கெல்லாம் நான் (அவைகளிலிருந்து வேறுபட்ட) ஸாக்ஷீ என்று உறுதியாய் எல்லா ஸந்தேஹங்களும் நீங்கிய வனாய், இடைவிடாமல் நன்கு சிந்திப்பாயாக.

***விளக்கம்***

*பார்க்கப்படுகிற எல்லாவற்றையும் அசித் வடிவம் என்று அறிந்து* (the entire objective phenomenon is non - Self) *உனக்குள் உள்ள சிதாத்மாவை உனது உண்மையான ஸ்வரூபம் என்று தெரிந்து கொண்டு மற்ற மதஸ்தர்கள் (கொள்கையைக் கொண்டவர்கள்) என்ன சொல்கிறார்கள் என்ற ஸம்சயங்களுக்கு இடம் கொடுக்காதவனாக இருந்துகொண்டு, தேஹம் இந்திரியம் முதலிய எல்லாவற்றிற்கும் நான் ஸாக்ஷீ என்று அனவரதமும் சிந்தனைசெய், நான் கேவலசைதன்யம்* (Pure Awareness): *மற்ற எல்லாமும் அறியப்படுபவை* (awarable things), *ஆகவே ஜடம் என்று அடிக்கடி விசாரம் செய்ய வேண்டும்.*

*ஜடமான அந்தக்கரணம் ஸ்வரூபமாகிய சிதாத்மாவின், கூடஸ்தனின் பிரதிபிம்பத்தை வாங்கிக்கொண்டு, 'நான்' என்று சைதன்யம் போல் நினைத்து செயல்படுகிறது. அந்த 'நான்' என்ற சித் சாயையை வைத்துக்கொண்டுதான், அந்தக்கரணம் மற்ற பொருள்களை அறிகிறது. ப்ரத்யக்தத்வமான சிதாத்மாவின்*

பிரதிபலிப்பைக்கொண்டு 'நான்' என்று அஹங்கரித்து, சைதன்யம் போல் விளங்குவதால், அதை சிதாபாஸன் என்பதுண்டு.

சிதாத்மாவாகிய கூடஸ்தனுக்கும் சிதாபாஸனுக்கும் விஷயீ (subject) - விஷயம் (object) ஸம்பந்தம் இருப்பதுபோல் தோன்றுகிறது. ஆனால் உண்மையில் அவ்வித ஸம்பந்தம் கிடையாது (அவற்றின் ஸம்பந்தம் பிம்ப-ப்ரதிபிம்ப ஸம்பந்தம் தான்). ஏனெனில், கூடஸ்த சைதன்யம் விஷயீ-விஷய ஸம்பந்தத்திற்கு அப்பாற்பட்டது. ஸர்வ வ்யவஹார அதீதமானது. சிதாபாஸனுக்கு ஸாக்ஷீயாயிருப்பது கூடஸ்தன் எனப்படும் சிதாத்மா. கூடஸ்த கேவல சைதன்யத்தினால்தான் சிதாபாஸன் விளங்குகிறான். இதை மீண்டும் விசாரிப்போம்.

ஒரு பானை ஒரு அறைக்குள் என்னால் அறியப்படாமல் இருக்கிறது. நான் அறைக்குள் வந்து அதைப்பார்த்ததும், இதுவரை என்னால் அறியப்படாமல் இருந்த பானை இப்பொழுது அறியப்பட்ட பானையாக ஆகியது. நான் அந்த பானையைத் தவிர வேறொன்றையும் பார்ப்பதில்லை அறிவதில்லை. நான் அறைக்குள் நுழைவதற்கு முன்பே, குடமும் அங்கு வைக்கப்படுவதற்கும் முன்னதாகவே, வேறொருவன் அந்த அறையில் இருந்து வருகிறான். அவன் அந்த பானை அங்கு அந்த அறைக்குள் இல்லாமல் இருந்ததையும், பின்னர் அங்கு வைக்கப்பட்டு என்னால் அறியப்படாமல் இருந்த பானையையும் முதலிலேயே பார்த்தான். பிறகு என்னையும் பார்த்தான். அந்த பானையை நான் அறிவதையும் பார்த்தான். அந்த வேறொருவன்தான் ஸாக்ஷீ எனப்படுபவன். அந்த பானை விஷயம் (object). அதை அறியும் நான் விஷயீ (subject). இந்த இரண்டையும் பானையை நான் பார்க்கும் க்ரியையும் பார்த்த 'ஸாக்ஷீ' அந்த வேறொருவன். அதைப்போலவேதான் ப்ரத்யக் சைதன்யமாகிய சிதாத்மா ஸாக்ஷீ எனப்படுகிறது. உதாரணமாகச் சொன்ன ஸாக்ஷீக்கு பார்க்கும் செயல்கிடையாது. அதற்கு எந்தவிதமான வியாபாரமும் இல்லை. இந்த விஷயம், விஷயீ, க்ரியை மூன்றும் விளங்குவதற்குக் காரணமாயிருப்பதால் அந்த சைதன்யத்திற்கு ஸாக்ஷீ என்று பெயர்.

சிதாபாஸன் விஷயத்தை மாத்திரம் பார்க்கும். ஸாக்ஷீ சைதன்யமோ சிதாபாஸன், விஷயம், சிதாபாஸன் விஷயத்தைப் பார்க்கும் க்ரியை ஆகிய மூன்றையும் பார்க்கிறது. அதனுடைய பார்வை நித்தியமாய், எப்பொழுதுமுள்ள தன்மையுள்ளதாய் இருக்கிறது. அதனால் சிதாபாஸன் இல்லையானாலும், விஷயம்

இல்லையானாலும், சிதாபாஸன் விஷயத்தை வியாபிக்காமல் இருந்தாலும், ஒரே மாதிரியாய் இந்த கூடஸ்த சைதன்யம் விளங்கிக்கொண்டு இருக்கும். இவ்விதம் நன்கு விசாரித்து அதைப்பிரித்து அதை ஸ்வரூபமாக அறிய வேண்டும் என்கிறார்.

தைத்திரியோபநிஷத்தில் ஆனந்தவல்லீயின் இறுதியில் ச்ரோத்ரியனும் (வேதத்தின் உட்பொருளை உணர்ந்தவனும்) ஆசைவாய்ப்பட்டு மடியாதவனுமாகிய ப்ரஹ்மஞானியின் எல்லை யில்லா பரமானந்தத்தைக் கூறும் ப்ரகரணத்தில் ஆதிசங்கரர் தமது பாஷ்யத்தில்

"निरस्ते त्वविद्याकृते विषयविषयिविभागे विद्यया स्वाभाविकः
परिपूर्णः एकः आनन्दोऽद्वैतो भवतीत्येतमर्थं विभावयिष्यन्नाह।"

அவித்யையினால் ஏற்பட்ட விஷயம், விஷயீ என்ற பிரிவு வித்யையினால் (ப்ரஹ்ம ஞானத்தினால்) நீங்கியதும் ஸ்வாபாவிக மான (ஸ்வரூபமான) பரிபூர்ணமாய், ஏகமாய், அத்வயமாய் ஆனந்தமாய் இருக்கிறான் என்ற இந்த அர்த்தத்தை நன்கு விளக்க விரும்பி உபநிஷத்து மேலும் சொல்கிறது'' என்று அருளுகிறார். அங்கு, அந்த ஸ்வரூபானந்த அனுபவத்தில் ஆனந்தம், ஆனந்தீ (ஆனந்தத்தை அனுபவிப்பவன்) என்ற பிரிவு கிடையாது என்பதை விஸ்தாரமாக விளக்குகிறார்.

கேவல சைதன்யத்தை அக்ஞானத்தினால் விஷயமாகவும் விஷயீயாகவும் (subject and object) நாம் பிரித்துக்கொண்டு இருக்கிறோம். எப்பொழுதும் subject ஆக உள்ள சைதன்யம், நித்யத்ருக் ஸ்வரூபமாக உள்ள சைதன்யம், விஷயீ விஷயம் என்ற ஸம்பந்தம் ஏற்பட்டதால் மறைபட்டு இருக்கிறது. அது இல்லாத இடமே கிடையாது. ஏன் நாம் நம்மை விஷயமாகவும் விஷயீ யாகவும் பிரித்துக்கொண்டோம் என்பதற்குக் காரணம் சொல்ல முடியாது. இது உலக வ்யவஹாரத்தில் நாம் பார்க்கும் உண்மை. அது அவித்யையினால் ஏற்படுகிறது. அந்த அவித்யையிலிருந்து இச்சை, காமம் ஏற்படுகிறது. அந்த இச்சையினால் நான் கர்த்தாவாக (doer of an action) இருக்கிறேன். இதுதான் தற்போதுள்ள நிலை. எப்பொழுது இந்த விஷயீ விஷய ஸம்பந்தம் நிற்குமோ, அப்பொழுதுதான் நாம் ஸ்வாபாவிகனாக, அத்வயனாக, ஆனந்தகனனாக நிலை பெறுகிறோம்.

சூரியன் பஞ்சைக் கொளுத்தாது. சாதாரண கண்ணாடி

*பஞ்சைக் கொளுத்தாது. ஆனால் சூர்ய வெளிச்சத்தை பிரதிபலிக்கும் கண்ணாடி பஞ்சைக்கொளுத்துகிறது. அதுபோலவே, ஸத்வ குணத்திலிருந்து தோன்றிய அந்தக்கரணம் என்ற ஜடமான கண்ணாடி, சூர்யனைப் போன்ற ஆத்ம சைதன்யத்தின் சாயையை வாங்கிக்கொண்டு 'நான்' என்ற விஷயீ ஆக மாறி கார்யங்களைச் செய்கிறது. சுத்த சைதன்யத்திற்கு ஸாக்ஷீ என்று பெயர். 'நான்' எனப்படும் சிதாபாஸனுக்கு விஷயீ என்று பெயர். சிதாபாஸனான எனக்கும் மற்ற விஷயங்களுக்கும் விஷயீ விஷய ஸம்பந்தம் உண்டு. ஆனால் 'நான்' என்ற அந்த சிதாபாஸனுக்கும் அதற்கும் ஸாக்ஷீயாக இருக்கும் ஸ்வரூபமாகிய, கூடஸ்த சுத்த சைதன்யத்திற்கும் விஷயீவிஷய ஸம்பந்தம் கிடையாது. அந்த சிதாத்மா ஸாக்ஷீயாக இருப்பதால்தான் 'நான்' எனப்படும் சிதாபாஸன் செயல்பட முடிகிறது.*

देहादिकं जगदसज्जडदु:खरूपं
मय्यद्वितीयनिजबोधसदादिरूपे ।
संदृश्यते भ्रमवशाद्गगने निरंशे
गन्धर्वपत्तनमिवेत्यनुभावय त्वम् ॥२०॥

**தேஹாதி**கம் ஜகதஸஜ்ஜட **து:க்க**ரூபம்
மய்யத்விதீய நிஜ **போதஸதாதி**ரூபே ।
ஸம்**த்**ருஶ்யதே ப்ரமவஶா**த்** ககனே நிரம்ஶே
கந்தர்வபத்தனமிவேத்யனுபாவய த்வம் ॥20॥

***20. பொழிப்புரை***

''தேஹம் முதலியவை முதற்கொண்டு ஜகத், அஸத் அன்ருத ஜட, துக்க ரூபமேயாம். அத்விதீயமான (இரண்டற்ற, வேறற்ற) ஸத் சித் ஆனந்த ஸ்வரூபமாகிய என்னிடத்தில் ப்ரமையின் (மதிமயக்கத்தின்) காரணமாய், நிரம்சமான ஆகாசத்தில் கந்தர்வநகரம் தோன்றுவது போலவே தான் நன்கு காணப் படுகிறது என்று மீண்டும் மீண்டும் பாவனை (அனுஸந்தானம்) செய்வாயாக''

**விளக்கம்**

இதுவரை நமது தேஹத்தினுள் உள்ள இந்திரியம் முதலியவற்றிற்கு நான் ஸாக்ஷீ என்று சொன்னார். தேஹம் முதற் கொண்டு மற்ற எல்லாமும் சேர்ந்ததுதான் இந்த உலகம் முழுவதும் ஆகும் அல்லவா? ஆகவே, இனி ஜகத்தைப்பற்றிக் கூறுகிறார்.

இந்த தேஹம் முதலியவற்றிற்குத்தானே நீ ஸாக்ஷீ. ஜகத் என்று ஒன்று இருக்கிறதே என்ற கேள்வி எழுகிறது. அதற்கு பதிலளிக்கிறார்.

முதலில் பஞ்ச கோசங்களைக் கூறி ''த்வம்'' பத அர்த்தம் விளக்கப்பட்டது. இனி ஜகத் விசாரிக்கப்படுகிறது. இந்த ஜகத் எல்லாம் அஸத், ஜட, துக்க ரூபமெனப்படுகிறது. ஆனால் நான் யார்? எனது ஸ்வரூபம் எத்தகையது? அதற்கு நேர் விரோதமான அத்விதீயமான கேவல சைதன்யம், அஸங்கமான சித்வடிவம், ஸத்தாமாத்ரம், ஆனந்தகன ஸ்வரூபம். இந்த அஸத், ஜட, துக்க ரூபமான ஜகத் முழுவதும் என்னிடத்தில் ப்ரமையினால், மதிமயக்கத்தினால் தென்படுகிறது. எப்படி வெளிச்சம் சரியாக இல்லாததன் காரணமாக, ப்ரமையினால் கயிற்றில் பாம்பு தோற்றம் அளிக்கிறதோ, அதுபோலவே அக்ஞானமாகிய இருட்டினால் இந்த ஜகத் தோன்றுகிறது. அம்சமில்லாத ஆகாசத்தில் கந்தர்வநகரம் எவ்வாறு நன்கு தோன்றுகிறதோ, அதைப்போலவே நிரம்சமான சைதன்யத்தில் இந்த ஜகத் ரூபம். இவை கேவல அத்விதீய தத்வமான என்னிடத்தில் வெறும் தோற்றம் என்று அடிக்கடி தொடர்ந்து பாவனை, அனுஸந்தானம் செய்துகொண்டேயிருக்க வேண்டும் என்கிறார். உண்மையில் இருக்கமுடியாததான ஜகத் தோற்றத்தை நாம் இப்பொழுது அனுபவித்துக்கொண்டு இருக்கிறோம்.

या चित्प्रभा त्वमिति मेयविभासयित्री
यत्संक्रमाद्घटपटाद्यवभासिका धीः ।
आब्रह्मकीटमहमित्यवभासमाना
या सैव संविदिति चिन्तय संततं त्वम् ॥२१॥

யா சித்ப்ரபா த்வமிதி மேயவிபாஸயித்ரீ
யத்ஸங்க்ரமாத்கடபடாத்யவபா ஸிகா தீ: ।
ஆப்ரஹ்மகீட மஹமித்யவ பாஸமானா
யா சைவ ஸம்விதிதி சிந்தய ஸந்ததம் த்வம் ॥21॥

**21. பொழிப்புரை**

எந்த சைதன்யத்தின் பிரகாசம் 'நீ' என்று அறியப்படும் பொருளை விளங்குமாறு செய்கிறதோ; புத்தி எதனுடைய சேர்க்கையினால் குடம் ஆடை முதலியவற்றை விளக்கி அறிகிறதோ; எது நான்முக ப்ரம்மா முதல் எறும்புவரை (எல்லாவற்றிலும்) 'நான்' என்று ஸ்புரிக்கிறதோ (ப்ரகாசிக்கிறதோ); அந்த ஸம்வித், பேரறிவேதான் (நான்) என்று ஸந்ததம் (எப்பொழுதும்) சிந்தனை செய்வாயாக.

**விளக்கம்**

*இதுவரை விஷயமாகிற எல்லாத்தோற்றங்களையும் உண்மையில் இல்லை, அவை மெய்ப்பொருள் இல்லை என்று தள்ளிவிட்டோம். இனி நமது உண்மையான ஸ்வரூபத்தைப்பற்றி தெரிந்துகொள்ள வேண்டும். நமது ஸ்வரூபம் ஸத், சித், ஆனந்தம் என்று சொல்லப்பட்டதல்லவா? இனி விவரித்துக் கூறுகிறார்.*

*நம் ஸ்வரூபம் சுத்த அறிவு (சித்) என்பதை முதலில் கூறுகிறார். ஒரு வைடூரியத்தை எடுத்துக்கொண்டால், அதனது ப்ரபை (ஒளி, ப்ரகாசம்) என்று ஒன்று இருக்கின்றதல்லவா? அதுவேறு, வைடூரியம் வேறு அல்ல. அவ்வாறே ஆத்ம சைதன்யத்தின் ப்ரபையையும் கொள்ளவேண்டும். சைதன்யம் வேறு, அதன் ப்ரபை வேறு அல்ல. அப்படி வேறு என்று சொன்னால் அது ஸ்ரீராமானுஜரின் விசிஷ்டாத்வைத மதமாகிவிடும். வைடூரியம் வேறு, அதன் குணமாகிய ப்ரபை வேறு என்பது அவரது கொள்கை. அத்வைதிகளோ மணியினுடைய ஸ்வரூபம் ப்ரபை என்கிறோம். அதைப்போலவே ஸ்ரீராமானுஜ ஆசார்யாளுக்கு ஸத், சித், ஆனந்தம் என்பது ப்ரஹ்மத்தின் குணம் என்பது கொள்கை. நாம் ப்ரஹ்மத்தின் ஸ்வரூபமே ஸத், சித் ஆனந்தம் என்கிறோம்.*

*"த்வம்" (நீ) என்ற பதத்தினால் குறிக்கப்பட்ட எந்த சித்ப்ரபை எல்லா பார்க்கப்படும் விஷயங்களையெல்லாம் விளங்கும்படி செய்கின்றதோ, எதனுடன் ஸம்பந்தப்பட்டதனால்,*

எதனுடைய சேர்க்கையால் நமக்குள் உள்ள ஜடமான புத்தியானது வெளியிலுள்ள பானை, துணி, முதலிய பொருட்களை அறிகின்றதோ, எந்த ஒன்று இருப்பதால் ப்ரஹ்மா முதல் எறும்புவரை உள்ள ஜட சரீரங்களில் ''நான், நான்'' என்று ஸ்புரித்துக்கொண்டே இருக்கிறதோ, இந்த மூன்றுவிதமாக விளங்கும் அந்த சைதன்யம் ஸம்வித் ஸ்வரூபம் பேரறிவு வடிவம் நான் என்று எப்பொழுதும் சிந்தித்துக் கொண்டேயிருக்க வேண்டும் என்பது இந்த வெகு அழகான ச்லோகத்தின் அர்த்தம்.

முதல் வரியில் 'நீ, நீ' என்று வெளிப்பதார்த்தங்கள் விளங்குவதற்குக் காரணம் இந்த ஸம்வித் என்றார். மூன்றாம் வரியில் ''நான், நான்'' என்று தான் விளங்குவதற்குக் காரணம் அதே ஸம்வித் என்று கூறுகிறார்.

அந்த சைதன்யம் ஒன்று இருப்பதால்தான் இந்த மூன்று கார்யங்கள் நடைபெறுகின்றன. எந்த மூன்று கார்யங்கள்? முதலாவதாக, உலக பதார்த்தங்களையெல்லாம் 'இது இது' என்று விளங்கும்படி செய்கிறது. இரண்டாவதாக, ஜடமான புத்தியானது சைதன்யம் போல, மற்ற ஜடபதார்த்தங்களை அறியக்கூடிய சக்தியைப்பெறுகிறது. மூன்றாவதாக, எல்லோருக்குள்ளும் ''நான், நான்'' என்று ஸ்புரிக்குமாறு செய்கிறது. இந்த சைதன்யம், ஸம்வித் தான் உன் ஸ்வரூபம் என்கிறார்.

பத்தொன்பதாவது ச்லோகத்தில் இந்த சரீரம் முதலியவைகளுக்கு நான் ஸாக்ஷீ என்று கூறினார். அப்படியானால், இந்த சரீராதிகள் தோன்றும் உலகமெல்லாம் உண்மையில் இருக்கின்றனவா என்ற ஸந்தேஹம் வரும். ஆகவே, இருபதாவது ச்லோகத்தில், இந்த காணப்படும் விஷயங்கள் எல்லாம் என்னிடத்தில் தோற்றமே தவிர, தனியாக அவை உண்மையில் இல்லை. சுத்த சைதன்யமான என்னிடத்தில் ஜடமானவை இருக்கமுடியுமா? ஆகையால் அவை வாஸ்தவமாக இல்லை. வெறும் தோற்றம்தான். அவை என்னிடம் தோன்றுவதால் எனக்கு நஷ்டம் ஒன்றுமில்லை என்று விளக்குகிறார். அடுத்த இந்த ச்லோகத்தில் எனது உண்மை ஸ்வரூபம் சுத்த சைதன்யம். இந்த சைதன்யமாக நான் இருப்பதனால்தான், இந்த தோற்றமாகிய ஜகத்தும் விளங்குகிறது என்று கூறுகிறார்.

நான் இப்பொழுது ஜனகனாக இருந்தேன் என்றால், இந்த ஒரு ச்லோகத்திற்கே என்னிடமுள்ள எல்லாவற்றையும் கொடுத்து

விடுவேன். அவ்வளவு அழகு! அழகுமாத்திரமா? "त्वमिति मेयविभासयित्री, घटपटाद्यवभासिका धीः, अहमिति अवभासमाना" என்று கோர்வையாகவுள்ளது.

(விதேக மன்னராகிய ஜனகர் தக்ஷிணை மிகுந்த ஒரு யக்ஞத்தைச் செய்தார். அச்சமயம் அவர் ஆயிரம் பசுக்களை கட்டினார். ஒவ்வொன்றின் கொம்பிலும் பத்துப்பத்து பாதம் தங்கம் கட்டப்பட்டது. சபையில் கூடியிருந்த வித்வான்களை நோக்கி ''உங்களுக்குள் எவர் பிரம்ம வித்தையில் சிறந்தவரோ அவர் இப்பசுக்களை ஓட்டிச் செல்லலாம் என்று சொன்னார். யாக்ஞவல்கியர் அவர்கள் கேட்ட கேள்விக்கெல்லாம் தக்க பதில் கூறி எல்லா வித்வான்களையும் ஜெயித்து அந்தப் பசுக்களை ஓட்டிச் சென்றார். பின்னர் ஜனகருக்கு உபதேசம் அளித்து பிரம்ம ஞானியின் பெருமையையும் கூறினார். உடனே ஜனகர் ''இங்ஙனம் அருளப்பெற்ற அடியேன் தேவரீருக்கு விதேக நாடுகளையும், சேவை புரிவதற்காக அடியேனையும் தருகிறேன்'' என்றார். பிருஹ தாரண்யக உபநிஷத்திலுள்ள இந்த விருத்தாந்தத்தை மனதிற் கொண்டே ஸ்வாமிகள் இந்த ச்லோகத்தின் அழகை மெச்சி மேற்குறிப்பிட்டவாறு கூறுகிறார்.).

जाग्रन्मुखत्रिविधधामसुसाक्षिणी या
जाग्रन्मुखत्रिविधधाम विलक्षणा या ।
स्वप्नाद्यनुस्मृतिबलात्सततैकरूपा
सैवाहमस्मि चितिरित्यवधारय त्वम् ॥२२॥

ஜாக்ரன்முகத்ரிவிததாம ஸுஸாக்ஷிணீ யா
ஜாக்ரன்முகத்ரிவிததாம விலக்ஷணா யா ।
ஸ்வப்னாத்யனுஸ்ம்ருதிபலாத் ஸததைகரூபா
ஸைவாஹமஸ்மி சிதிரித்யவதாரய த்வம் ॥22॥

***22. பொழிப்புரை***

எது நனவு முதல் மூன்று வேறு வேறு நிலைகளுக்கு (மாறதலையடையும் அவற்றின் தோற்றத்திற்கு) மாறாத

ஸாக்ஷீயோ; நனவு முதல் மூன்று நனவு, கனவு, உறக்கம் நிலைகளிலிருந்தும் (அவற்றின் தோற்றத்திற்கு அதிஷ்டான மாக, அடிப்படையாக), வேறுபட்டதோ; நனவு முதலியவற்றை தொடர்ந்து நினைவு கூறும் தன்மையுடையதால் எப்பொழுதும் ஒரே வடிவாயுள்ளதோ; அந்த சைதன்யமாகத்தான் நான் இருக்கிறேன், என்று நீ உறுதி கொள்வாயாக.

**விளக்கம்**

*முந்திய ச்லோகத்திற்கு என்னிடமுள்ள எல்லாவற்றையும் கொடுத்துவிடுவேன் என்று சொன்னேன் அல்லவா? இந்த ச்லோகத்திற்கு யாரிடமிருந்தாவது கொஞ்சமாவது கடன் வாங்கிக் கொடுக்க வேண்டும். வேறுவழியில்லை, அவ்வளவு அழகு.*

*ஜாக்ரத் முதலாகவுடைய (ஜாக்ரத்-விழிப்பு; ஸ்வப்னம் - கனவு; ஸுஷுப்தி - உறக்கம்) எந்த மூன்று அவஸ்தைகள் (நிலைகள்) உண்டோ, அவைகளுக்கு விசேஷ ஸாக்ஷீயாக எது இருக்கின்றதோ என்கிறார். சாதாரணமாகச் சொல்லப்படும் ஸாக்ஷீ போன்ற ஸாக்ஷீ அது அல்ல என்று தெரிவிப்பதற்காக ஸுஸாக்ஷீ, விசேஷமான ஸாக்ஷீ, என்கிறார். ஸாக்ஷீ என்றால் பார்த்தல் என்ற செயலுடையவன். அவனுக்கு பார்க்கிறவன், பார்த்தல் பார்க்கப்படும் பொருள் என்ற த்ரிபுடி உண்டு. ஆத்மா எனும் ஸாக்ஷீ அப்படியல்ல. பார்க்காமல் பார்க்கும் ஸாக்ஷீ, த்ரிபுடி இல்லாத ஸாக்ஷீ. மேலும் ஆத்மாவே எல்லாவற்றிற்கும் ஸாக்ஷீ. அது ஒன்றுதான் நித்யமானது, மாறுதலற்றது.*

*அப்படியானால் அந்த ஜாக்ரத், ஸ்வப்ன, ஸுஷுப்தி என்ற மூன்று நிலைகளுக்குள்ளே இருக்கிறானா இந்த ஸாக்ஷீ? இல்லை. அவை மூன்றும் ஜடம். ஆத்மாவோ சைதன்யம். ஆகவே சொல்லுகிறார். ஜாக்ரத் முதலிய மூன்று அவஸ்தைகளுக்கு (நிலைகளுக்கு) விலக்ஷணனாக (வேறாக) எது உள்ளதோ என்கிறார். இந்த மூன்று அவஸ்தைகளும் அதிஷ்டானமாகிய கேவல சைதன்யத்தில் ஆரோபிதம்தான்.*

*ஸ்வப்னம் முதலிய நிலைகளையும் அனுஸ்ம்ருதி (மறுபடியும் நினைப்பூட்டுதல்) செய்ய முடிவதால், அதாவது ஒவ்வொரு நிலையையும் நான் அனுபவித்தேன் என்று சொல்ல முடிவதால், நினைவு கூர்வதால், அனுபவிக்கிறவன், அனுபவிக்கப் படும் நிலை அல்லது பதார்த்தங்களினின்று வேறாகத்தானே இருக்க*

முடியும். மாறுகிற மூன்று நிலைகளையும் பார்க்கிறவன் மாறாதவனாக, என்றும் நிலையானவனாகத்தான் இருக்க வேண்டும். அத்தகைய நித்யமான பொருள் எதுவோ, அந்த ஒன்றேயான சைதன்யம் தான் நான் என்று உறுதியாக தீர்மானித்துக் கொள்வாயாக.

नोदेति नास्तमपयाति न वृद्धिमेति
नैवोपयाति परिणाममपक्षयं वा ।
स्वाध्यस्तसर्वजननादिविकारसाक्षि-
ण्येषा हि संविदिति चिन्तय संततं त्वम् ॥२३॥

நோதேதி நாஸ்தமுபயாதி ந வ்ருத்திமேதி
நைவோபயாதி பரிணாமமபக்ஷயம் வா।
ஸ்வாத்யஸ்த ஸர்வஜனனாதி விகாரஸாக்ஷிண்
யேஷா ஹி ஸம்விதிதி சிந்தய ஸந்ததம் த்வம் ॥23॥

**23. பொழிப்புரை**

இந்த ஸம்வித்(பேரறிவு) உதிப்பதில்லை; அஸ்தமனம் அடைவதில்லை; வளர்ச்சி பெறுவதில்லை; மாறுதலையோ அல்லது தேய்வையோ யெய்வதில்லை. தன்னிடத்தில் (அக்ஞானத்தினால்) அத்யாஸம் செய்யப்பட்ட, ஏற்றப் பட்டுள்ள பிறப்பு முதலிய மாறுதல்களுக்கு (என்றும் மாறாத) ஸாக்ஷீயாக இதே உள்ளது. என்று எப்பொழுதும் நீ சிந்திப்பாயாக.

***விளக்கம்***

*சிதாத்மா நித்யமான வஸ்து என்பதையே மேலும் விளக்குகிறார்.*

*இது ஒருகாலும் புதிதாக உற்பத்தியாவதில்லை; அழிவடைவதில்லை; வளர்வதில்லை, மாறுதலும் தேய்வும் அடைவதில்லை. ஷட்பாவ விகாரங்களில் ஐந்து விகாரங்களையும்*

கூறியுள்ளார். ஆகவே ஆறாவதான ''இருப்பது'' என்பதையும் சொன்னதாக எடுத்துக்கொள்ள வேண்டும். நீ அறிவின்மையால் ''நான் பிறந்தவன், இறப்பவன்'' என்று உன்மேல் அத்யாசத்தால் ஏற்றிக் கொண்டுள்ள பிறப்பு முதலிய மாறுதல்கள் எல்லாவற்றிற்கும் ஸாக்ஷீயல்லவோ இந்த ''ஸம்வித்'' ஆகிய உனது ஸ்வரூபம் என்பதை எப்பொழுதும் சிந்தனை செய்வாயாக. (அது அல்லாததில் அது என்ற புத்தியே, மாறுபாட்டுக் கற்பனையே அத்யாஸம் எனப்படும்). ஆத்மா அல்லாத உடலிலும் இந்திரியங்கள் முதலியவற்றிலும் நான், என்னுடையது என்ற எண்ணம் எதுவோ, இந்த அத்யாஸமே, மாறுபட்டுள்ள கற்பனையே பந்தமாகும். இது அறிவின்மையால் ஏற்படுகிறது.

பதினாறாவது முதல் பத்தொன்பதாவது ச்லோகம் வரை ஜீவனைப் பற்றிச் சொல்லப்பட்டது. இருபதாவது ச்லோகத்தில் ஜகத்தின் தன்மை விசாரிக்கப்பட்டது. மேலும் அது ப்ரமையினால், மதிமயக்கத்தினால் சுத்த சைதன்யமான என்னிடத்தில் தோன்றும் தோற்றமாத்திரமே என்று அத்வைதஸித்தாந்தப்படி விளக்கப் பட்டது. இருபத்தொன்றாவது முதல் இருபத்து மூன்றாவது ச்லோகம் வரை நமது ஸ்வரூபம் ''கேவல'' அறிவு, அறிவையும் அறியும் பேரறிவு என்று உபதேசித்தார். மேலும் நமது ஸ்வரூபம் ''ஸத் ஆனந்தம்'' ''அனந்தம்'' என்பதைச் சொல்லத்துவங்குகிறார்.

मच्छेषतां समवलम्ब्य सुतादिसर्वं
येन प्रियं भवति तेन सुखस्वरूपः ।
देहेन्द्रियादिविषयप्रलयैकसाक्षी
यस्मात्ततः सदिति मे निजरूपमास्स्व ॥२४॥

மச்சேஷதாம் ஸமவலம்ப்ய ஸுதாதிஸர்வம்
யேன ப்ரியம் பவதி தேன ஸுகஸ்வரூப: ।
தேஹேந்த்ரியாதிவிஷய ப்ரலயைக ஸாக்ஷீ
யஸ்மாத்தத: ஸதிதி மே நிஜரூபமாஸ்ஸ்வ ॥24॥

### 24. பொழிப்புரை

எதனால் என்னுடைய ஆனந்தத்தை நன்கு பற்றியிருப்பதால் புதல்வன் முதலான எல்லாமும் எனது ப்ரீதிக்கு விஷயமாகின்றதோ, அதனால் (ஆத்மா மேலான ப்ரீதிக்கு விஷயமாயிருப்பதனால்) நான் நிரதிசயமான ஆனந்த வடிவினன்; தேஹம் இந்திரியங்கள் முதலியன, விஷயமாகிய ஜகத் இவற்றின் பிரளயத்திற்கும் (அவை ஒடுங்கி நிற்கும் தினசரி பிரளயமான உறக்க நிலைக்கும் மஹாபிரளயத்திற்கும்) ஸாக்ஷீயாக நான் எப்பொழுதும் இருப்பதால், நான் ''ஸத்'' என்று தனது ஸ்வரூபத்தையறிந்து கொள்வாயாக.

**விளக்கம்**

*எனது ஸ்வரூபம் அளவுகடந்த அகண்டமான ஆனந்தம். அது மேலான ப்ரீதிக்கு விஷயமாயிருப்பதினால், அந்த ஆச்ரயத்தை நன்கு அவலம்பித்து, புத்திரன் முதலிய எல்லாம் எனக்கு பிரியமுள்ளவையாகின்றன. எனக்கு திருப்தியும் ஸுகமும் கொடுப்பதனால்தான், அவர்கள் எனக்கு ப்ரியமாக ஆகிறார்கள். சப்தாதி விஷயங்களும் அவ்வாறே என் பொருட்டே பிரியமுள்ளதாகின்றன. எந்த விஷயமும் ஸ்வத: அதாவது, விஷயத்திற்காகவே பிரியமாவதில்லை. எல்லாவற்றிலும் வைக்கும் ப்ரீதி நமக்கு ஸுக ஸாதனமென்ற முறையில்தான். வேறிடத்தில் வைக்கும் அந்த ப்ரீதி தனக்காகத்தான். ஆனால், தன்னிடத்தில் உள்ள ப்ரீதி அப்படி வேறொன்றை உத்தேசித்ததல்ல. ''நான் இல்லாமல் போகக் கூடாது. (எப்பொழுதும்) இருக்க வேண்டும்'' என்கிற ப்ரீதி ஆத்மாவில்தான் காண்கிறதல்லவா? ஆகையால் தன்னிடத்திலுள்ள ப்ரீதி மிகவும் மேலானது. இவ்வாறு பரப்ரேமாஸ்பதமாக, மேலான ப்ரீதிக்கு இடமாக, ஆத்மா இருப்பதால் அது மேலான ஆனந்தவடிவம் என்று ஸித்திக்கின்றது.*

*தேஹம், இந்திரியம் முதலியன மற்றும் விஷயங்கள் யாவும் அழிவதற்கும் நான் ஒரே ஸாக்ஷியாய் இருப்பதால், எனது உண்மையான ஸ்வரூபம் மாறுதலடையாததும் அழிவற்றதும் நித்யமுமான ''ஸத்'' (கேவல இருப்பு) என்று முடிவு செய்.*

*ஆத்மா ஸத்ரூபம் என்பதையே அடுத்த ச்லோகத்திலும் கூறுகிறார்.*

आदौ त्वमेव सदभूरविशषेरूप-
स्त्वत्तोदितं जगदिदं सविशेषजातम् ।
त्वय्येव तिष्ठति तथा त्वयि चावसाने
संलीयते जलनिधाविव बुद्बुदादिः ॥२५॥

ஆதௌ த்வமேவ ஸதபூரவிஶேஷரூபஸ்
த்வத்தோதிதம் ஜகதிதம் ஸவிஶேஷஜாதம் ।
த்வய்யேவ திஷ்டதி ததா த்வயி சாவஸானே
ஸம்லீயதே ஜலநிதாவிவ புத்புதாதி: ॥25॥

**25. பொழிப்புரை**

முதலில் நீ ஸத்மாத்திரமாகவே வேற்றுமையற்றதாய் எவ்வித விசேஷ ரூபமும் அன்றி இருந்தாய். உன்னிடமிருந்து தோன்றியதே எல்லா விசேஷங்களும் கூடியதான இந்த ஜகத் ஸமுத்திரத்தில் நீர்க்குமிழிகள் முதலியன (தோன்றி விளங்கி மறைவது) போல, உன்னிடமே இது (உலகம்) நிலைபெற்றுள்ளது, அவ்வாறே முடிவில் நன்கு லயமுமடைகிறது.

**விளக்கம்**

*முதலில் நீ ஒன்றே அத்வயமாக ஒருவித விசேஷ ரூபமுமில்லாமல் சுத்த, ஸத்தாக இருந்தாய். உன்னிடத்திலிருந்துதான் பின்பு விசேஷங்களுடன் கூடிய இந்த ஜகத் முழுவதும் உதித்தது. அது உன்னிடத்தில்தான் இப்பொழுது நிலைத்திருக்கிறது. கடைசியில், அப்படியே உன்னிடத்தில்தான் நன்கு லீனமாகிறது. ஸமுத்திரத்தில் நீர்க் குமிழிகள், நுரை, அலைகள் முதலியன தோன்றி மறைவது போல என்கிறார்.* "यतो वा इमानि भूतानि जायन्ते, येन जातानि जीवन्ति, यत्प्रयन्त्यभिसंविशन्ति" *என்ற ச்ருதி வாக்கியத்தையொட்டி இக்கருத்து உரைக்கப்பட்டுள்ளது.*

व्यापित्वहेतुबलतो न दिशास्ति मेऽन्तो
नित्यत्वहेतुबलतश्च न कालतोऽन्तः ।
सार्वात्म्यहेतुबलतश्च न वस्तुतोऽन्त-
स्तस्मादनन्तमिति मे निजरूपमास्स्व ॥२६॥

வ்யாபித்வஹேதுபலதோ ந திஶாஸ்தி மேऽந்தோ
நித்யத்வஹேது பலதஶ்ச ந காலதோऽந்த: ।
ஸார்வாத்ம்யஹேது பலதஶ்ச ந வஸ்துதோऽந்த:
தஸ்மாதனந்தமிதி மே நிஜரூபமாஸ்ஸ்வ ॥26॥

**26. பொழிப்புரை**

நீக்கமற நிறைந்திருக்கும் (தன்மையின்) காரணத்தினால் சிறப்புடைய எனக்கு திசை வரையறுப்பதில்லை; நித்யமாக இருப்பதனால் மாட்சியுடைய எனக்கு காலத்தினால் முடிவு கிடையாது. எல்லாவற்றிற்கும் ஆத்மாவாக உள்ளதால், மேன்மையுள்ள எனக்கு வேறு வஸ்துவினால் எல்லை இல்லை. ஆகையால் என்னுடைய நிஜவடிவம் அனந்தம், எல்லையற்றது என்று நிலையுறுவாயாக.

**விளக்கம்**

*ஸர்வ வ்யாபகம் என்ற காரணத்தால் எனக்கு திசையினால், தேசத்தினால் முடிவு இல்லை. நித்யம் என்ற காரணத்தால் எனக்கு காலத்தினால் எல்லை கிடையாது. எல்லாவற்றிற்கும் ஆத்மாவாக நான் இருப்பதால் (எனக்கு அன்யமாக வேறு ஒரு வஸ்து இல்லை என்பதால்) எனக்கு ஒரு வஸ்துவினால் வரையறுப்பு கிடையாது அதனால் எனது நிஜஸ்வரூபம் ''அனந்தம்'' (எல்லையற்றது) என்ற நிச்சயத்துடன் இரு.*

*ஆகையால் ப்ரஹ்மேந்திரரின் உபதேசத்தின்படி நாம் நினைக்க வேண்டியது இவ்வளவுதான் ''உலகம் என்னிடத்தில் தோற்ற மாத்திரம். நான் கேவல அறிவு ஸ்வரூபம். நான் ஸத், சித், ஆனந்தம், அனந்தம் ஆகியவற்றை ஸ்வரூபமாக உடையவன்'' என்ற தீர்மானத்துடன் இருக்க வேண்டும்.*

एवं निरन्तरसमाधिवशान्निराधि-
ज्ञानाग्निदग्धसहकारणजन्मबीजः ।
आविर्भवन्निजसुखानुभवैकतृप्तो
ब्रह्मैव नूनमिह संभवसि ध्रुवं त्वम् ॥२७॥

ஏவம் நிரந்தர ஸமாதி வஶான்னிராதிர்
ஞானாக்னிதக்த ஸஹகாரண ஜன்மபீஜ: ।
ஆவிர்பவந்நிஜ ஸுகானுபவைக த்ருப்தோ
ப்ரஹ்மைவ நூனமிஹ ஸம்பவஸி த்ருவம் த்வம் ॥27॥

## 27. பொழிப்புரை

இவ்வாறு இடைவிடா ஸமாதிவசத்தினால், பூர்வஜன்ம வினைகளின் காரணமாக ஏற்படும் மனத்துயராகிய 'ஆதி' எனப்படும் தடை நீக்கப்பட்டவனாய், மறுபிறப்பிற்கு வித்தாயுள்ள கர்மமும் அதனுடைய காரணமான அவித்யையும் ஞானமெனும் அக்னியால் பொசுக்கப்படவே, ஆவிர்பவிக்கும் நிஜானந்த அனுபவத்திலேயே பரமதிருப்தியடைந்தவனாய், இங்கேயே நீ ப்ரஹ்மமாகவே திகழ்வாய் என்பது திண்ணம்.''

**விளக்கம்**

இவ்வாறு ''நான் ஸத், சித், ஆனந்தம், அனந்தரூபன்'' என்பதை சிரவணம் மனனம்'' ஆகியவற்றினால் ஸந்தேஹமன்னில் தீர்மானம் செய்து அதிலேயே நிரந்தரமாக மனதை நிறுத்தி, ஒருமைப்படுத்தி வந்தால் நமக்கு பிரதிபந்தமாக நிற்கும் 'ஆதி' எனப்படுகின்ற (நாம்) முன் செய்த கர்மாக்களினால் ஏற்படும் மனக் கஷ்டம், இடைஞ்சல் இல்லாமல் போகின்றது. முன் செய்த பாவங்கள் அற்றவனாக ஆகிவிடுவோம். 'ஆதி' என்பது தற்சமயம் நம்கண்ணுக்கு புலப்படாதவை. அதாவது முன் செய்த பாவங்கள். 'வ்யாதி' என்பது இப்பொழுது நாம் அநுபவிக்கும் தேஹத்தின் கஷ்டம்.

(''ஆதி'', ''வியாதி'' என்ற இரண்டும் துக்கத்தின் காரணங்களாம். அவைகளின் நிவ்ருத்தியே சுகமாகும். அவைகளின் க்ஷயம் மோக்ஷம் எனப்படும்.

தேஹத்தின் கஷ்டத்தை வியாதி என்பார்கள். ஆதி என்பதோ வாஸனாமயமானது. அவை இரண்டும் அக்ஞானத்தினால் உண்டாகின்றன. தத்வ ஞானத்தினால் நசிக்கின்றன.

அக்ஞானத்திற்கு வசப்பட்டு, இந்திரிய நிக்ரஹமின்றி, சித்த சாந்தியையிழந்து, ராகத்வேஷங்கள் தொடரவே, ''இது கிடைத்தது, இது கிடைக்கவில்லை'' என்ற ஜட சிந்தனையினால் மஹா மோஹத்தைக் கொடுக்கும் மன உளைச்சல் ''ஆதி'' எனப்படும்.

மழைக்காலத்துத் தூறல் போல இடைவிடாமல் இடைஞ்சல் செய்யும்'' - யோக வாஸிஷ்டம்)

இப்படி நிரந்தர ஸமாதி பண்ணினால்தான் நமது பழைய வாஸனைகள் போகும். ஸமாதியென்றால் பிராணன் முதலிய வைகளை அடக்கி கண்களை மூடி உட்கார்ந்திருப்பது அல்ல. மேற் சொன்ன ஆத்மதத்வத்தை எப்பொழுதும் மனதில் வைத்துக் கொண்டு இருத்தலே ஸமாதி எனப்படும். அந்தந்த அதிகாரிக்குத் தக்கவாறு இந்த ஸமாதிகாலம் நீடிக்கும். அவ்வாறு ஸமாதி செய்வதால் அக்ஞானத்தை பொசுக்கக்கூடிய அளவிற்கு சக்தி, ஞானத்திற்கு வருகிறது. அதனால்தான் இந்த ஞானஸமாதியை நிரந்தரமாக பண்ண வேண்டியிருக்கிறது. அப்படி சக்தியடைந்த அந்த ஞானத்தினால் ஜன்மத்திற்குக் காரணமான கர்மாவும் அந்த கர்மாவிற்கும் காரணமாக இருக்கும் அவித்யையும் எரிந்து போகிறது. அதாவது, கர்மாவுடன் ஸம்ஸாரபீஜம் ஆகிய அவித்யை அழிந்து விடுகிறது. மீண்டும், மீண்டும் ஜன்ம மெடுப்பதற்குக் காரணம் கர்மா: கர்மாவிற்குக் காரணம் ஆசை, காமம்: ஆசைக்குக் காரணம் அவித்யை.

இங்கு ஸமாதி என்று சொல்லப்படுவது ஞானநிஷ்டை. யார் இந்த நிஷ்டையை செய்ய முடியும்? உலக வியவஹாரத்தை எவன் மிகவும் குறைத்துக்கொள்கிறானோ அவன்தான் ஞானநிஷ்டையில் நிரந்தரமாக ஈடுபடமுடியும். இப்படி ஸமாதி செய்துகொண்டே வந்தால், நமது உண்மையான ஸ்வரூபஸுகம் தானே வெளிப்படும். ஒருவனது ஞானநிஷ்டை ஸம்ஸார பீஜம் மீண்டும் முளைக்காதவாறு நன்கு வறுக்கப்பட்ட அளவிற்கு வந்திருப்பது அவனது நிஜ சுகம் தானாகவே வெளிப்பட ஆரம்பிக்கும் போதுதான் தெரியும். அந்த ஸ்வஸுகத்தில் ஆத்மாவிலேயே ஒன்றி நித்ய திருப்தியடைந்த வனாக ஆகிவிட்டால், அவன் நிச்சயமாக இங்கேயே ப்ரஹ்ம மாகவே ப்ரஹ்மத்தை அறிந்ததால் ஆகிறான்.

இதற்கு மேல் உபதேசம் தேவையில்லை என்ற தீர்மானம் ப்ரஹ்மேந்திரருக்கு வந்துவிட்டதால் தான், இந்த ச்லோகத்திலேயே பிரஹ்மமாக ஆகும் பலனைக்கூறி முடித்துவிடுகிறார். பத்தொன்ப தாவது ச்லோகத்தில் ஆரம்பித்த உபதேசம் இத்துடன் முடிந்து விடுகிறது.

इत्थं गिरा विमलया परसौख्यदात्र्या
वाचा गुरोर्विमथिताखिलसंशयौघः ।
शिष्यः समाधिपरिशीलनतीक्ष्णदिव्य-
ज्ञानासिखण्डितभवाख्यविषद्रुमोऽभूत् ॥२८॥

இத்தம் கிரா விமலயா பரஸௌக்ய தாத்ர்யா
வாசா குரோர் விமதிதாகில ஸம்ஶயௌக: ।
ஶிஷ்ய: ஸமாதி பரிஶீலன தீக்ஷ்ணதிவ்ய-
ஞானாஸி கண்டித பவாக்ய விஷத்ருமோऽபூத் ॥28॥

***28. பொழிப்புரை***

இவ்விதமாய் பரிசுத்தமான வார்த்தைகளால் ஆனதும், மேலான சௌக்கியத்தையளிக்கக்கூடிய குருவின் வாக்கினால் எல்லா ஸம்ஶயக்கூட்டங்களும் போக்கடிக்கப்பட்ட சிஷ்யன் ஸமாதி, விசாரம் இவைகளால் நன்றாக தீட்டப்பட்ட திவ்யமான ஞானமெனும் வாளினால் ஸம்ஸாரமெனப்படும் விஷ விருக்ஷத்தை வெட்டியவனாக ஆனான்.

स्वानन्दमप्रतिहतं परिभुज्य हर्षा-
दश्रुप्रपूर्णनयनः पुलकाङ्कितङ्गः ।
शिष्यः सगद्गदमुवाच गुरुं घृणाब्धिं
नत्वा तदङ्घ्रियुगलं विनयोपयुक्तः ॥२९॥

ஸ்வானந்தமப்ரதிஹதம் பரிபுஜ்ய ஹர்ஷா
தஶ்ரு ப்ரபூர்ண நயன: புலகாங்கிதாங்க: ।
ஶிஷ்ய : ஸகத்கத முவாச குரும் க்ருணாப்திம்
நத்வா ததங்க்ரியுகலம் வினயோபயுக்த: ॥29॥

**29. பொழிப்புரை**

தங்குதடையற்ற (நிரர்கலமான) ஸ்வரூப ஆனந்தத்தை நன்கு அனுபவித்து, ஆனந்தத்தால் கண்ணீர் நிறைந்த நயனங்களையும், புளகாங்கிதம் அடைந்த அங்கங்களையும் உடையவனாய், சிஷ்யன் உணர்ச்சி வசப்பட்டு, தழுதழுத்த குரலில் கருணைக்கடலான குருவினுடைய இருபாதங்களையும் வணங்கி வினயத்தோடு கூறலானான்.

स्वामिन्भवद्वचनदिव्यसुधाभिषिक्त-
स्वानन्दमञ्जुनगरे विहरामि नित्ये ।
अज्ञानदुर्हृदमतीव शितेन सम्य-
ग्ज्ञानासिना परिविलूय सहानुजातम् ॥३०॥

ஸ்வாமின் பவத்வசன திவ்யஸு॰தாபிஷிக்த-
ஸ்வானந்த மஞ்ஜு॰ நகரே விஹராமி நித்யே ।
அஞான துர்ஹ்ருத மதீவ ஶிதேன ஸம்யக்-
ஞானாஸினா பரிவிலூய ஸஹானுஜாதம் ॥30॥

**30. பொழிப்புரை**

'ஸ்வாமி! (அனாதிகாலமாய்) கூடவே வந்துள்ள அக்ஞானமெனும் எதிரியை 'ஸம்யக்ஞானம்' எனப்படும் மிகவும் கூர்மையான வாளினால் நன்கு வெட்டி, தங்களது வாக்கு எனும் திவ்யமான அம்ருதத்தினால் அபிஷேகம் செய்யப்பட்டவனாகி, அழிவற்ற ஸ்வரூபானந்தம் என்ற கவர்ச்சிகரமான நகரத்தில் களித்துக்கொண்டு இருக்கிறேன்.

**விளக்கம்**

*ஸ்வாமி! தங்களது வாக்கு எனும் திவ்யமான அமிர்தத்தினால் அபிஷேகம் செய்யப்பட்டவனாகி, அழிவற்ற ஸ்வரூப*

ஆனந்தமாகிய அழகிய கவர்ச்சிகரமான நகரத்தில் களித்துக் கொண்டிருக்கின்றேன். "ராஜ்யத்தில் இருக்கின்றாயே, உன்னுடைய எதிரிகளை வெல்லவேண்டாமா? "என்றால்" ஆம்! அக்ஞானம் தான் எனது எதிரி. அனாதிகாலமாய் கூடவே வந்துள்ள அந்த அக்ஞானமாகிய எதிரியை 'ஸம்யக்ஞானம்' எனும் மிகவும் கூர்மையான வாளினால் நன்கு வெட்டிவிட்டேன்." என்கிறான் சிஷ்யன். எதிரியை வென்ற பிறகுதான் பட்டாபிஷேகம் அல்லவா?

குரு உபதேசித்ததை சிஷ்யன் இடைவிடாமல் நன்றாக அனுஸந்தானம் செய்து, அதன் பலனாகிய ஸ்வானுபூதியையடைந்து விட்டான் என்று இந்த ச்லோகத்திலிருந்து தெரிகிறது.

"ஸம்யக்ஞானம்" - தெளிந்த உண்மையான ஞானம் என்றால் என்ன? ஆதிசங்கரர் விவேக சூடாமணியில் இதை விளக்குகிறார். "ப்ரஹ்மமும் ஆத்மாவும் ஒன்றே என்ற தெளிவான அநுபவ ஞானம் நல்ல ஞானம் (ஸம்யக் ஞானம்) என்பது ச்ருதியின் கொள்கை" என்கிறார் (சு 202)" யோகவாஸிஷ்டம், ஸம்யக்ஞானம் என்பதைக் கீழ்கண்டவாறு விளக்குகின்றது. "ஸ்வரூபமாகிய பேரறிவு ஒருக்காலும் அறியப்படுபொருளன்று, அது "கேவல" அறிவு, மாறுதலற்றது, அழிவற்றது, மனோவாக்கிற்கப்பாற்பட்டது. இவ்வாறு உள்ளே உறையும் போதமே ஸம்யக் ஞானம்."

"இந்த பரமாத்மா, ஆதியும் அந்தமும் இல்லாத ஸ்வயம் ப்ரகாசமான சைதன்யமாய் இங்கு விளங்குகிறது என்ற ஒரே நிறைந்த உறுதிதான் ஸம்யக் ஞானம் என்று அறிஞர்கள் கூறுகின்றனர்."

गच्छामि कुत्र किमहं करवाणि किं वा
गृह्णामि किं परिजहामि मयि प्रपूर्णे ।
निर्व्याजसौख्यजलधौ परिदृश्यमानं
फेनादिकं जगदिति स्थिरनिश्चयो मे ॥३१॥

கச்சாமி குத்ர கிமஹம் கரவாணி கிம் வா
க்ருஹ்ணாமி கிம் பரிஜஹாமி மயி ப்ரபூர்ணே ।
நிர்வ்யாஜ ஸௌக்யஜலதௌ பரித்ருஶ்யமானம்
பேனாதிகம் ஜகதிதி ஸ்திர நிஶ்சயோ மே ॥31॥

**31. பொழிப்புரை**

நான் எங்கு இனிசெல்லவேண்டும்? என்ன செய்யவேண்டும்? எதைக் கொள்ளவேண்டும்? எதைத் தள்ளவேண்டும்? கடலில் நுரை முதலியவை (தோன்றி மறையும் தோற்றமாத்திரமாக) காணப்படுவது போலவே, பரிபூர்ணமான ஸஹஜானந்த ஸாகரனாகிய என்னிடத்தில் இந்த ஜகத் தோன்றுகிறது என்பது என்னுடைய ஸ்திரமான முடிவு.

**விளக்கம்**

*மேலும், சிஷ்யன் இனி தனக்கு இந்த உலகில் செய்து ஆகவேண்டியது ஒன்றும் இல்லை என்பதையும் உணர்ந்து சொல்கிறான். "நான் எங்கு இனி செல்லவேண்டும்? நான் என்ன செய்யவேண்டும்? நான் எதைக் கொள்ள வேண்டும்? அல்லது எதைத் தள்ளவேண்டும்? நான் யார்? பரிபூர்ணனல்லவா? நான் தன்னிறைவுள்ளவன் ஆத்மதிருப்தனாக இருப்பதால் நித்யதிருப்தன். பூர்ணமாக நிறைந்துள்ள பாத்திரத்தில் இனி தண்ணீரை விடமுடியுமா? என்னுடைய ஆனந்தம் வேறு எதையும் எதிர்பார்த்து அதைச்சார்ந்து அடையப்படுவதில்லை. நான் இயற்கையாகவே ஆனந்தஸாகரன். அத்தகைய பூர்ணமான ஸஹஜானந்த ஸமுத்திரமான என்னிடத்தில், கடலில் நுரைமுதலியவை தோன்றி மறையும் தோற்றமாத்திரமாக காணப்படுவது போல், இந்த ஜகத் தோன்றி மறைகிறது என்பது என்னுடைய ஸ்திரமான முடிவு.*

मायाभिधो जलधरो जगदाख्यमम्बु
वर्षत्वनेन मम चिद्वपुषः क्षतिः का ।
लाभोऽपि वा क इति संततमात्मरूपं
संचिन्तयन्स्थिरमतिर्विहरामि नित्ये ॥३२॥

மாயாபிதோ ஜலதரோ ஜகதாக்ய மம்பு
வர்ஷத்வனேன மம சித்வபுஷ: க்ஷதி: கா ।
லாபோபி வா க இதி ஸந்ததமாத்மரூபம்
ஸம்சிந்தயன்ஸ்திரமதிர் விஹராமி நித்யே ॥32॥

***32. பொழிப்புரை***

மாயை எனப்படும் மேகம் ஜகத் என்ற மழையை வர்ஷிக்கட்டும். அதனால் சித் வடிவமான எனக்கு என்ன நஷ்டம்? லாபம் தான் என்ன? என்று இடையறாது ஆத்ம ஸ்வரூபத்தையே நன்கு சிந்தித்துக்கொண்டு, நித்யமான அவ்வஸ்துவில் ஸ்திரமான ப்ரக்ஞையுடன் களிக்கிறேன்.

**விளக்கம்**

*மாயை என்ற பெயருடைய மேகமானது ஜகத் எனப்படும் மழையை பொழியட்டுமே, எப்படி ஆகாசத்திற்கு மழையினால் எவ்விதமான கேடுமில்லையோ, அவ்வாறே பற்றற்ற சுத்த அறிவு வடிவமாகிய எனக்கு இந்த மாயையின் மழையினால் என்ன நஷ்டம்? ஆகாயத்தைப்போல் நிர்மலமாயும் (மாசற்றதாயும்) ஒரே வடிவாயும், எல்லையற்றதாயும், அசைவற்றதாயும், மாறுபாடு அற்றதாயும், உள்ளென்றும் வெளியென்றும் இல்லாததாயும், வேறு ஒன்று அற்றதாயும், இரண்டற்றதாயும், தான் தானே விளங்குவதாயும் உள்ள பரப்ரஹ்ம ஸ்வரூபமல்லவா? ப்ரக்ஞான வடிவமல்லவா? அத்தகைய எனக்கு ஜகத் என்ற இந்த மழையினால் ஒரு நஷ்டமுமில்லை; லாபம் தான் என்ன? ஒன்றுமில்லை. ஜகத் எனப்படும் மழை இஷ்டம்போல் கொட்டிக் கொண்டிருக்கட்டும்.. நானோ எப்பொழுதும் இவ்வாறு எனது ஆத்ம ஸ்வரூபத்தை நன்கு அனுஸந்தானம் செய்துகொண்டு அதில் புத்தி ஸ்திரமாக முற்றும் நிலைபெற்றதாக, அந்த நித்யமான ஆத்மானுபவத்தில் திளைத்திருக்கிறேன்.*

*இந்த ஜகத்தை நான் பொருட்படுத்துவதில்லை. அதை நான் தடஸ்தமாக, ஸாக்ஷியாகப் பார்த்துக் கொண்டிருக்கிறேன்.*

वाक्कायमानसभवं सकलं हि कर्म
प्रोक्तं शुभाशुभमयं न ततोऽस्ति भिन्नम् ।
वागादिसाक्षिणि कथं मयि निर्मले स्या-
त्कर्मद्वयं तदुदितं जननादिकं वा ॥३३॥

வாக்காயமானஸபவம் ஸகலம் ஹி கர்ம
ப்ரோக்தம் ஶுபாஶுபமயம் ந ததோSஸ்தி பின்னம் ।
வாகாதி ஸாக்ஷிணி கதம் மயி நிர்மலே ஸ்யாத்
கர்மத்வயம் ததுதிதம் ஜனனாதிகம் வா ॥33॥

**33. *பொழிப்புரை***

மனம், வாக்கு காயம் இவற்றால் இயற்றப்படுவதும், சுபம் அசுபம் வாய்ந்தது என்று கூறப்படும் எல்லா கர்மமும் அந்த ஸ்வரூபத்திற்கு வேறானது இல்லை. வாக்கு முதலியவை களுக்கு ஸாக்ஷியாகவும் நிர்மலமாகவும் (மாசற்றதாகவும்) உள்ள என்னிடத்தில் புண்ணிய பாபங்களாகிய இருவினைகள் எப்படி இருக்கும்? அக்கர்மங்களின் பலனாய் ஏற்படும் பிறப்பு முதலியவைகளும் எப்படி எனக்கு இருக்கும்?

व्यावृत्तरूपमिदमेव जगद्विभिन्नं
ज्ञानं त्वभिन्नमनुवृत्ततयाखिलेषु ।
ज्ञानं च भिन्नमिति चेज्जडतादिदोष
प्राप्तिर्भवेच्छ्रुतिशिरांसि न तं सहन्ते ॥३४॥

வ்யாவ்ருத்த ரூபமிதமேவ ஜகத்விபின்னம்
ஞானம் த்வபின்னமனுவ்ருத்ததயாகிலேஷு ।
ஞானம் ச பின்னமிதி சேஜ்ஜட தாதி தோஷ-
ப்ராப்திர்பவேச் ச்ருதி ஶிராம்ஸி ந தம் ஸஹந்தே ॥34॥

**34. பொழிப்புரை**

மாறிக்கொண்டிருக்கும் பல்வேறு ரூபங்களுடன் கூடிய இந்த ஜகத் வெவ்வேறு என பிரிவுக்குட்பட்டதாகவே இருக்கும். சுத்த சைதன்யமோ எல்லாவற்றிலும் அகண்டமாய் தொடர்ந்து ஊடுருவி இருக்கும் தன்மையையுடையதனால் பிரிவுக்குட் பட்டதல்ல. அந்த பேரறிவு பேதமுள்ளது என்றோமானால், அதற்கு ஜடத்வம் முதலிய தோஷங்கள் ஏற்பட்டுவிடும்; அதை வேதங்களின் மகுடங்களாகிய உபநிஷத்துக்கள் ஸஹித்துக் கொள்ளாது. (வேதாந்தத்திற்கு புறம்பாகிவிடும்).

**விளக்கம்**

*இந்த ஜகத் ஒன்றிலிருந்து வேறுபட்டதான மற்றொன்று இவ்விதமாக வித்தியாஸங்களும் வேற்றுமைகளையும் உடையது. ஆனால் ஸ்வரூபமாகிய சைதன்யமாய் அகண்டமாய், எல்லாவற்றிலும் தொடர்ந்து ஊடுருவியிருக்கும் தன்மை யுடையதனால், ஞானம் ஒன்றே, வேற்றுமைகளுடையதில்லை. ஜகத்தோற்றம்தான் பேதங்கள் உடையது. ஞானம் அபேதமான ஒன்றுதான். சைதன்யத்தை பேதமுள்ளது என்று சொன்னால், அது ஜடத்வம் முதலிய தோஷங்களையுடையதாகிவிடும். அப்படி பேதம் உள்ளதாக இருக்கட்டுமே என்றால், ச்ருதிசிரஸ் ஆக இருக்கும் வேதாந்தம் அதை ஸஹித்துக் கொள்ளாது. அது வேதாந்தத்திற்குப் புறம்பாகயிருக்கும்.*

नैवेन्द्रियाणि विषयेषु नियोजयामि
प्राग्वासनावशत एव हि तानि यान्ति ।
स्वान्गोचरान्प्रति ममास्ति न साक्षितापि
सा साक्ष्यभेदकलिता खलु सोऽप्यसत्यः ॥३५॥

நைவேந்த்ரியாணி விஷயேஷு நியோஜயாமி
ப்ராக்வாஸனாவஶத ஏவ ஹி தானி யாந்தி ।
ஸ்வான்கோசரான்ப்ரதி மமாஸ்தி ந ஸாக்ஷிதாபி
ஸா ஸாக்ஷ்யபேத கலிதா கலு ஸோப்யஸத்ய: ॥35॥

### 35. பொழிப்புரை

நான் இந்திரியங்களை அவ்வவற்றின் விஷயங்களில் சேர்ப்பதில்லை. முன்ஜன்ம வாஸனையின் காரணமாகவே, அவை தத்தம் விஷயங்களையடைகின்றன. இந்திரியங்களுக்கு விஷயமாவதைப் பற்றி எனக்கு ஸாக்ஷீயாயிருக்கும் தன்மையும் கிடையாது. ஏனெனில், ஸாக்ஷீத்வமும் ஸாக்ஷீக்கு விஷயம் என்று பேதத்தினால் ஏற்படுகிறதல்லவா? அதுவும் ஸத்யமல்ல.

**விளக்கம்**

*முக்கியமான விஷயங்கள் சொல்லியாகிவிட்டது. ப்ராரப்த கர்மம் முதலியன என்னிடம் ஒட்டாது என்பதை விளக்கத்துவங்குகிறார்.*

*நான் இப்பொழுது எல்லாவற்றையும் பார்த்துக்கொண்டு இருக்கிறேனே. சாப்பிட்டுக்கொண்டு இருக்கின்றேனே, என்று நினைக்கிறாயா? பழைய வாஸனைகளினால் இந்திரியங்கள் தம் தம் விஷயங்களில் செல்லுகின்றன. நான் இந்திரியங்களை விஷயங்களில் (அகந்தையின் முனைப்புடன்) செலுத்துவதில்லை. சாதாரணமாக ஒவ்வொருவரும் ஒவ்வொரு நிமிடமும் இந்திரியங்களுக்கு ஸ்வயவேகம் கொடுத்து அவற்றை விஷயங்களில் ஏவுகிறார்கள். நானோ அப்படி ஏவுவதில்லை.*

*என்னால் ஒரு விஷயம் பார்க்கப்பட்டதை உத்தேசித்து, எனக்கு ஸாக்ஷீயாக இருக்கும் தன்மை உள்ளது என்று நினைக்கிறாயா? அதுவும் கிடையாது. ஸாக்ஷ்யம் உளது என்று பேதத்தைக்கருத்திற் கொண்டு அல்லவா எனக்கு ஸாக்ஷீத்வம் சொல்லப்படுகிறது? வாஸ்தவதமாக எனக்கு விஷயங்கள் ஒன்றுமே கிடையாது. நான் அத்வயன். அகண்டன், நான் பஞ்ச கோசங்களுக்கும் ஸாக்ஷீ என்று சொல்லப்படுகிறது. என்னவோ, பஞ்சகோசங்கள் உண்மையான 'பதார்த்தங்கள் என்றும், நான் பஞ்சகோச விலக்ஷணன், அவஸ்தாத்ரய ஸாக்ஷீ என்றெல்லாம் சொல்லப்படுகின்றது. உண்மையில் எனக்கு பஞ்சகோசங்களும், அவஸ்தாத்ரயமும் கிடையாதே. அவைகள் எல்லாம் அக்ஞானத்தினால் ஆராபிதம்தானே. அவைகள் எல்லாம் இருப்பதாக வைத்துக்கொண்டு அல்லவோ அவற்றிற்கு நான் ஸாக்ஷீ என்று கூறப்படுகிறது? 'ஸாக்ஷீ', 'சேதா', 'கேவல' என்று சுத்தப்ரஹ்மத்திற்கு ஒரு ஸாக்ஷீத்வம் கற்பிக்கின்றோமே, அது உலக*

*பதார்த்தங்களை ஸாக்ஷ்யமாக வைத்துத்தானே சொல்லப்படுகிறது. அந்த ஸாக்ஷ்ய பேதம் என்பதும் பாரமார்த்திகமாக ஸத்யமல்லவே. ஆத்மசைதன்யத்திற்கு வேறாக ஒரு வஸ்துவே இல்லாததால் நமக்கு ஸாக்ஷீ என்ற வியாபாரமே உண்மையில் கிடையாதே. உலகம் தோன்றுகிறது என்று சொல்லுகிற வரையில் ஆத்மா தோற்றத்திற்கு ஒரு ஸாக்ஷீ என்கிறோம். உலகத்தோற்றம் என்பதேயில்லை என்கிறபோது, அதற்கு ஒரு ஸாக்ஷீ கிடையாது அல்லவா?*

*பிரவிலாபத்ருஷ்டி மித்யாத்ருஷ்டி, இவைகளில்தான் ஸாக்ஷீ என்பதைக் கூறுகிறோம். பாதத்ருஷ்டியிலிருந்து பார்க்கும்போது ஸாக்ஷீத்வமே கிடையாது. ப்ரஹ்மேந்திராள் இங்கு மிகவும் உத்தண்டமாக, ப்ரௌடமாக பேசுகிறார்.*

भेदोऽपि साक्ष्यगत एव न साक्षिणो मे
भेदस्य साक्षिणि कथं प्रभवेत्स भेदः ।
भेदो न सुप्तिसमयेऽनुपलम्भनाच्च
सन्नास्तिता न इह दृष्टतया न वाच्या ॥३६॥

**பேதோ**பி ஸாக்ஷ்யகத ஏவ ந ஸாக்ஷிணோ மே
பேதஸ்ய ஸாக்ஷிணி கதம் ப்ரபவேத் ஸ பேத: ।
**பேதோ** ந ஸுப்திஸமயே ऽனுபலம்பனாச்ச
ஸன்னாஸ்திதா ந இஹ த்ருஷ்டதயா ந வாச்யா ॥36॥

### *36. பொழிப்புரை*

பேதமும் ஸாக்ஷீயின் விஷயங்களுக்குள் தான் உள்ளதே தவிர ஸாக்ஷீயாகிய என்னிடத்தில் இல்லை. பேதத்திற்கு ஸாக்ஷீயினிடத்தில் அந்த பேதம் எப்படியிருக்கும்? ஏனெனில் உறக்கத்தில் (ஸுஷுப்தியில்) பேதம் அனுபவிக்கப்படுவதில்லை. (பேதம் இருப்பதற்கும் இல்லாததற்கும் நான் ஸாக்ஷீ) ஸத்வஸ்துவிற்கு இல்லாமல் போவது என்பது கிடையாது. பேதம் இப்பொழுது காணப்படும் தன்மையுடையதாயிருப்பதால், அது எப்பொழுதும் இருப்பதாகக் கூறமுடியாது.

***விளக்கம்***

*பேதம் என்பது ஸாக்ஷ்யங்கள் ஒன்றுக்கொன்று இடையில்தான் உண்டு. ஸாக்ஷீயாகயிருக்கும் என்னிடத்தில் பேதம் கிடையாது. பேதத்தின் ஸாக்ஷீயினிடத்தில் பேதம் எப்படி இருக்கும்? முந்தின ச்லோகத்தில் நான் ஸாக்ஷீ, உலகம் ஸாக்ஷ்யம் என்கிற பேதம் என்னிடம் கிடையாது என்றார். இந்த ச்லோகத்தில் ஸாக்ஷ்யங்களின் ஸ்வபாவமான பேதங்கள் யாவற்றிற்கும் ஸாக்ஷீயான என்னிடம் எப்படி இருக்க முடியும், என்று கூறுகிறார்.*

*நல்ல தூக்கத்தில் பேதம் என்பது இல்லை. பேதம் அனுபவிக்கப்படுவதில்லை என்பதனால் ஸத்துக்கு, உள்ளதற்கு, ஒரு பொழுதும் இல்லை என்பது கிடையாது. "सत् नास्तिता न" ஸத்தாக இருப்பது எப்பொழுதும் இருக்க வேண்டும். பேதம் என்பது உண்மையானால், ஸுஷுப்தியிலும் அது அனுபவிக்கப்பட வேண்டும். ஆனால் அப்படி அனுபவிக்கப்படுவதில்லை. (பேதம்) இப்பொழுது காணப்படுகிறது என்பதால் (எப்பொழுதும் இருப்பதாகச்) சொல்லமுடியாது "इह दृष्टतया न वाच्या".*

विश्वं सदेतदिति कार्यकरत्वहेतो-
　　र्यद्यस्य सत्त्वमिह साधयितुं यतेथा: ।
तर्ह्यत्र रज्जुभुजगाद्यपि सद्बलात्स्या-
　　त्सत्यत्वहेतुरिदमाहुरबाधितत्वम् ॥३७॥

விஶ்வம் ஸதேததிதி கார்யகரத்வஹேதோ:
　　யத்யஸ்ய ஸத்வமிஹ ஸாதயிதும் யதேதா: ।
தர்ஹ்யத்ர ரஜ்ஜு புஜகாத்யபி ஸத்பலாத்ஸ்யாத்
　　ஸத்யத்வஹேதுரித மாஹுரபாதி தத்வம் ॥37॥

**37. *பொழிப்புரை***

இந்த ஜகத் ஒருகார்யத்தைச் செய்வதற்கு ஹேதுவாக (காரணமாக) இருக்கிறது என்பதனால், இது உண்மையென்று

இதனுடைய உண்மையான இருப்பை ஸாதிக்க (நிரூபிக்க) முயன்றால், அப்பொழுது அங்கு கயிற்றில் தோன்றும் பாம்பு முதலியவைகளும் கூட ஒரு காலத்தில் இருக்கிறது (தோன்றுகிறது) என்ற காரணத்தால் மெய்ப்பொருளாகிவிடும். முக்காலத்திலும் பாதம் இல்லாமல் இருப்பதே மெய்ப்பொருளாயிருப்பதற்கு ஹேது என்று கருதப்படுகிறது.

**விளக்கம்**

*இந்த ஜகத் ஒருகார்யத்தை செய்வதற்கு ஹேதுவாக (காரணமாக) இருக்கிறது என்பதனால், அது உண்மையென்று இதனுடைய உண்மையான இருப்பை ஸாதிக்க (நிரூபிக்க) முயன்றால், அப்பொழுது அங்கு கயிற்றில் தோன்றும் பாம்பு முதலியவைகளும் கூட இருக்கிறது (தோன்றுகிறது) என்ற காரணத்தால் உண்மையாகிவிடும். கயிற்றில் தோன்றும் அந்த பாம்பு பயந்து ஓடுதல் என்ற காரியத்தை செய்யவைக்கிறது அல்லவா? சிப்பியில் தெரியும் வெள்ளியை உண்மையென்று நினைத்து அதை கையில் எடுக்க முயற்சி செய்கிறோம் அல்லவா?*

*ஒரு பொருள் ஸத்யம் என்று சொல்ல வேண்டுமேயானால், அது முக்காலத்திலும் போக்கடிக்கப்படாததாக இருக்க வேண்டுமே யன்றி, அந்த பொருள் ஒரு கார்யத்தை செய்கிறது என்ற காரணத்தால் மட்டும் அதற்கு ஸத்யத்வம் (மெய்ப் பொருளாய் இருக்கும் தன்மை) உன்டென சொல்ல முடியாது.*

कीदृग्विधं जगदये वद सत्त्वचित्तया-
ध्याकारहीनमिति पृष्टवतेऽस्ति मह्यम् ।
प्रत्युत्तरं किमिति ते तव मौनमेव
प्रत्युत्तरं भवति मां प्रति गच्छ जाल्म ॥३८॥

கீத்ருக்விதம் ஜகதயே வத ஸத்வசித்த்யா
தீயாகார ஹீனமிதி ப்ருஷ்டவதேSஸ்தி மஹ்யம் ।
ப்ரத்யுத்தரம் கிமிதி தே தவ மௌனமேவ
ப்ரத்யுத்தரம் பவதி மாம் ப்ரதி கச்ச ஜால்ம ॥38॥

**38. பொழிப்புரை**

''ஐயனே!'' ''ஸத்'', ''சித்'' முதலிய வடிவமில்லாத ஜகத் எப்படிப்பட்டதாக இருக்கும். சொல்லுங்கள்'' என்று கேட்கும் எனக்கு தங்களது பதில் என்ன? தங்களுடைய மௌனம்தான் எனக்கு அளிக்கும் பதிலாயிருக்கும். 'போடா, மடையா' என்று உரைப்பதுபோல.

**விளக்கம்**

*அதிஷ்டானமில்லாமல் ஆராபிதமானது தோன்றாதல்லவா? கயிறு இருந்தால்தானே, அதில் பாம்பு என்ற தோற்றம் ஏற்படலாம்? நாமரூபாத்மகமான பிரபஞ்சம் மித்யை, தோற்றம் மாத்திரம். அதற்கு அதிஷ்டானமாக, நித்யமாக உள்ளது ஸத் சித் ஆனந்தவடிவான ப்ரஹ்மமே, என்கிறார்.*

ज्ञानाग्निदग्धमपि भाति जगद्विचित्रं
यच्च ध्वनिभ्रमवतः सविशेषबोधात् ।
तस्मिन्भ्रमे विमथितेऽपि तथैव भाति
दिग्वत्यथो मम च तद्वदतो स सत्तत् ॥३९॥

ஞானாக்னி தக்தமபி பாதி ஜகத் விசித்ரம்
யச்ச த்வனிப்ரமவத: ஸவிஶேஷபோதாத் ।
தஸ்மின் ப்ரமே விமதிதேऽபி ததைவ பாதி
திக்வத்யதோ மம ச தத்வததோ ந ஸத்தத் ॥39॥

**39. பொழிப்புரை**

ஞானாக்னியால் தஹிக்கப்பட்டுவிட்டாலும் இந்த ஆச்சரியமான ஜகத் விளங்குகிறது. எதிரொலியினால் பிரமித்துப் போகிறவனுக்கு விசேஷமான அறிவுரையினால் அவனிடம் அந்த மதிமயக்கம் நன்கு தெளிந்துவிட்டபோதிலும், அந்த பிரதித்வனி அவ்வாறே அத்திசையில் (ஒலித்து)

விளங்குகிறது. அதைப்போலவே இந்த ஜகத் எனக்கு தோன்றினாலும், அது 'ஸத்' ஆகாது.

**விளக்கம்**

*ஞானமெனும் அக்னியினால் பொசுக்கப்பட்டாலும் ஜகத் எனக்கு தோற்றமளிக்கிறது என்பது ஆச்சர்யம். தீக்குச்சியினால் தஹிக்கப்பட்டால்தான் சாம்பலாகி பிறகு தெரியாது. ஆனால் இங்கே இந்த ஜகத் தோற்றமாத்திரம்தான் என்ற ஸம்யக் ஞானத்தினால் அதை ஸத்யம் என்று இதுவரை தவறாக எண்ணிவந்த அக்ஞானம் நசித்துவிட்டது. எதிரொலியால் ப்ரமித்துப்போனவன் அது எதிரொலிதான், ஒலி அல்ல என்ற சரியான அறிவு வந்ததால், அந்த எதிரொலியில் இருந்த மயக்கம் நன்கு தெளிந்தாலும், அந்த திசையிலிருந்து எதிரொலி ஒலித்துக் கொண்டுதான் இருக்கும். உண்மையை அறிந்தபின் அதில் மதிமயக்கம் இருக்காது, அவ்வளவுதான். அதுபோலவேதான் எனக்கும் இந்த ஜகத் தோற்றமாத்ரமே, மித்யையே, ஸத்யமல்ல.*

भूमिं जले तदपि तेजसि तच्च वायौ
तं व्योम्नि तत्त्रिगुणया सह मय्यनन्ते ।
पूर्णे विलाप्य परिशिष्टमखण्डसंवि-
त्स्वानन्दरूपमनुभूय रमेऽहमद्य ॥४०॥

பூமிம் ஜலே ததபி தேஜஸி தச்ச வாயௌ
தம் வ்யோம்னி தத்த்ரிகுணயா ஸஹ மய்யனந்தே ।
பூர்ணே விலாப்ய பரிஶிஷ்டமகண்ட ஸம்வித்
ஸ்வானந்தரூபமனுபூய ரமேऽஹமத்ய ॥40॥

**40. *பொழிப்புரை***

மண்ணை ஜலத்திலும், அதை தேஜஸ்ஸிலும் அதை வாயுவிலும் அதை ஆகாசத்திலும் அதையும் முக்குணப்ரக்ருதியுடன் எல்லையற்ற பரிபூர்ணனான என் ஸ்வரூபத்தில் முறையே

ப்ரவிலாபனம் (லயசிந்தனை) செய்து மிஞ்சியிருக்கும் அகண்டமான ஞானானந்த ஸ்வரூபத்தை அனுபவித்துக் கொண்டு இங்கு நான் களிப்புற்றிருக்கிறேன்.

**விளக்கம்**

*உலகம் தோன்றிக்கொண்டேயிருப்பதால் இப்பொழுது நாம் என்ன செய்யவேண்டும்? அந்த ஜகத் தோற்றத்தை பிரவிலாபனம் செய்யவேண்டும். எப்படி? ப்ருத்வீ தத்வத்தை அடுத்த ஸூக்ஷ்ம தத்வமான ஜலத்திலும், அதை அக்னியிலும், அந்த தேஜஸை வாயுவிலும், அந்த வாயுவை ஆகாசத்திலும் ப்ரவிலாபனம் (லயசிந்தனை) செய்ய வேண்டும். பிறகு அதை முக்குணங்களுடன் கூடிய ப்ரக்ருதியிலும் அதையும் அனந்தமான எல்லையற்றதானதும் பூர்ணமானதுமான ஆத்மாவாகிய என் ஸ்வரூபத்தில் ப்ரவிலாபனம் செய்ய வேண்டும். இவ்விதம் ப்ரவிலாபனம் என்ற லயசிந்தனை செய்தபின், மிஞ்சியுள்ள அகண்டமான ஞான ஆனந்த ஸ்வரூபத்தை அனுபவித்து அதில் தற்போது நான் ரமித்துக் கொண்டிருக்கிறேன். ஆனந்தக் களிப்புற்றிருக்கிறேன்.*

अज्ञानतन्निरसने मयि बोधरूपे
स्यातां कथं तिमिरतद्विरती इवार्के ।
बन्धश्च मोक्ष इति कल्पनमप्यसत्यं
भ्रान्त्यैव भात्यखिलसाक्षिणि नित्यमुक्ते ॥४१॥

அஞ்ஞானதன்னிரஸனே மயி **போத**ரூபே
ஸ்யாதாம் கதம் திமிர தத் விரதீ இவார்கே ।
பந்தஶ்ச மோக்ஷ இதி கல்பனமப்யஸத்யம்
ப்ராந்த்யைவ **பா**த்யகிலஸாக்ஷிணி நித்யமுக்தே ॥41॥

***41. பொழிப்புரை***

எவ்வாறு சூர்யனிடத்தில் இருட்டும், அதை நீக்குதலும் இருக்க இயலாதோ, அவ்வாறே அக்ஞானமும் அதை விலக்குவதும்

சித்ஸ்வரூபனான என்னிடத்தில் எவ்வாறு இருக்க முடியும்? பந்தம் என்றும் மோக்ஷம் என்றும் கற்பிப்பதும் உண்மையல்ல. மன மயக்கத்தால் நித்ய முக்தனாயும், எல்லாவற்றிற்கும் ஸாக்ஷியுமாயிருக்கும் ஸ்வரூபத்தில் அவை தோற்றமாத்ரமாய் (மட்டுமே) விளங்குகின்றன.

**விளக்கம்**

அக்ஞானமும் அதைப்போக்குவதும் 'கேவல' அறிவு வடிவமான என்னிடத்தில் எப்படி இருக்க முடியும்? சூர்யனிடத்தில் இருட்டு வந்தது அது அகன்றது என்பது உண்டா? அதே மாதிரி ஞானமான எனது ஸ்வரூபத்தில் அக்ஞானமும் அதை விலக்குவதும் எப்படி முடியும்? பந்தம் மோக்ஷம் என்று சொல்கிறாயே, நான் யார்? நித்யமுக்தன். நித்யமுக்தனிடத்தில் பந்தமும் மோக்ஷமும் வருமா? பந்தம் வந்தது. அது நீக்கப்பட்டு மோக்ஷம் கிடைத்தது என்று சொன்னால் நான் நித்யமுக்தனாக இருக்க முடியுமா? பந்தம் மோக்ஷம் என்ற இந்த கற்பனையெல்லாம் அஸத்யமேதான். பந்தம் என்பதற்கும் மோக்ஷம் என்பதற்கும் ஸாக்ஷியான என்னிடத்தில், நித்யமுக்தனான ஸ்வரூபத்தில் அவை பிராந்தியினால், மதி மயக்கத்தினாலேயே காணப்படுகின்றன. நித்யமுக்தனிடத்தில் பந்தம் என்பதும் அதன் விலகுதலும் எல்லாம் மனதினுடைய பேதலிப்பு. மனது சும்மாயிருந்தால், ஸ்வரூபத்தில் ஒன்றியிருந்தால், இவை ஒன்றும் கிடையாது. என் மனம் சும்மாயிருந்தாலும் இந்த உலகம் இருக்கிறதே, என்று கேட்கிறாயா? இருக்கட்டுமே, அதைப்பற்றி நீ ஏன் கவலைப்படுகிறாய்?

आरब्धकर्मणि च भोगत एव नष्टे
　　प्राणादयोऽपि मम नोत्क्रमितुं समर्थाः ।
तप्ताग्निनिष्ठजतुवन्मयि पूर्णबोधे
　　लीना भवन्ति न पुनर्जननादिकं स्यात् ॥४२॥

ஆரப்த கர்மணி ச போகத ஏவ நஷ்டே
　　ப்ராணாதயோSபி மம நோத்க்ரமிதும் ஸமர்தா: ।
தப்தாக்னிநிஷ்டஜதுவன்மயி பூர்ணபோதே
　　லீனா பவந்தி ந புனர்ஜனனாதிகம் ஸ்யாத் ॥42॥

ப்ரவிலாபனம் (லயசிந்தனை) செய்து மிஞ்சியிருக்கும் அகண்டமான ஞானானந்த ஸ்வரூபத்தை அனுபவித்துக் கொண்டு இங்கு நான் களிப்புற்றிருக்கிறேன்.

**விளக்கம்**

*உலகம் தோன்றிக்கொண்டேயிருப்பதால் இப்பொழுது நாம் என்ன செய்யவேண்டும்? அந்த ஜகத் தோற்றத்தை பிரவிலாபனம் செய்யவேண்டும். எப்படி? ப்ருத்வீ தத்வத்தை அடுத்த ஸூக்ஷ்ம தத்வமான ஜலத்திலும், அதை அக்னியிலும், அந்த தேஜஸை வாயுவிலும், அந்த வாயுவை ஆகாசத்திலும் ப்ரவிலாபனம் (லயசிந்தனை) செய்ய வேண்டும். பிறகு அதை முக்குணங்களுடன் கூடிய ப்ரக்ருதியிலும் அதையும் அனந்தமான எல்லையற்றதானதும் பூர்ணமானதுமான ஆத்மாவாகிய என் ஸ்வரூபத்தில் ப்ரவிலாபனம் செய்ய வேண்டும். இவ்விதம் ப்ரவிலாபனம் என்ற லயசிந்தனை செய்தபின், மிஞ்சியுள்ள அகண்டமான ஞான ஆனந்த ஸ்வரூபத்தை அனுபவித்து அதில் தற்போது நான் ரமித்துக் கொண்டிருக்கிறேன். ஆனந்தக் களிப்புற்றிருக்கிறேன்.*

अज्ञानतन्निरसने मयि बोधरूपे
स्यातां कथं तिमिरतद्विरती इवार्के ।
बन्धश्च मोक्ष इति कल्पनमप्यसत्यं
भ्रान्त्यैव भात्यखिलसाक्षिणि नित्यमुक्ते ॥४१॥

அஞ்ஞானதன்னிரஸனே மயி **போதரூபே**
ஸ்யாதாம் கதம் திமிர தத் விரதீ இவார்கே ।
பந்தஶ்ச மோக்ஷ இதி கல்பனமப்யஸத்யம்
ப்ராந்த்யைவ பாத்யகிலஸாக்ஷிணி நித்யமுக்தே ॥41॥

***41. பொழிப்புரை***

எவ்வாறு சூர்யனிடத்தில் இருட்டும், அதை நீக்குதலும் இருக்க இயலாதோ, அவ்வாறே அக்ஞானமும் அதை விலக்குவதும்

சித்ஸ்வரூபனான என்னிடத்தில் எவ்வாறு இருக்க முடியும்? பந்தம் என்றும் மோக்ஷம் என்றும் கற்பிப்பதும் உண்மையல்ல. மன மயக்கத்தால் நித்ய முக்தனாயும், எல்லாவற்றிற்கும் ஸாக்ஷியுமாயிருக்கும் ஸ்வரூபத்தில் அவை தோற்றமாத்ரமாய் (மட்டுமே) விளங்குகின்றன.

**விளக்கம்**

அக்ஞானமும் அதைப்போக்குவதும் 'கேவல' அறிவு வடிவமான என்னிடத்தில் எப்படி இருக்க முடியும்? சூர்யனிடத்தில் இருட்டு வந்தது அது அகன்றது என்பது உண்டா? அதே மாதிரி ஞானமான எனது ஸ்வரூபத்தில் அக்ஞானமும் அதை விலக்குவதும் எப்படி முடியும்? பந்தம் மோக்ஷம் என்று சொல்கிறாயே, நான் யார்? நித்யமுக்தன். நித்யமுக்தனிடத்தில் பந்தமும் மோக்ஷமும் வருமா? பந்தம் வந்தது. அது நீக்கப்பட்டு மோக்ஷம் கிடைத்தது என்று சொன்னால் நான் நித்யமுக்தனாக இருக்க முடியுமா? பந்தம் மோக்ஷம் என்ற இந்த கற்பனையெல்லாம் அஸத்யமேதான். பந்தம் என்பதற்கும் மோக்ஷம் என்பதற்கும் ஸாக்ஷியான என்னிடத்தில், நித்யமுக்தனான ஸ்வரூபத்தில் அவை பிராந்தியினால், மதி மயக்கத்தினாலேயே காணப்படுகின்றன. நித்யமுக்தனிடத்தில் பந்தம் என்பதும் அதன் விலகுதலும் எல்லாம் மனதினுடைய பேதலிப்பு. மனது சும்மாயிருந்தால், ஸ்வரூபத்தில் ஒன்றியிருந்தால், இவை ஒன்றும் கிடையாது. என் மனம் சும்மாயிருந்தாலும் இந்த உலகம் இருக்கிறதே, என்று கேட்கிறாயா? இருக்கட்டுமே, அதைப்பற்றி நீ ஏன் கவலைப்படுகிறாய்?

आरब्धकर्मणि च भोगत एव नष्टे<br>
प्राणादयोऽपि मम नोत्क्रमितुं समर्थाः ।<br>
तप्ताग्निनिष्ठजतुवन्मयि पूर्णबोधे<br>
लीना भवन्ति न पुनर्जननादिकं स्यात् ॥४२॥

ஆரப்த கர்மணி ச போகத ஏவ நஷ்டே<br>
ப்ராணாதயோऽபி மம நோத்க்ரமிதும் ஸமர்தா: ।<br>
தப்தாக்னிநிஷ்டஜதுவன்மயி பூர்ணபோதே<br>
லீனா பவந்தி ந புனர்ஜனநாதிகம் ஸ்யாத் ॥42॥

**42. பொழிப்புரை**

ப்ராரப்த கர்மமும் அனுபவிக்கப்பட்டு கழிந்தபின், என்னுடைய ப்ராணன்கள் முதலியவைகளும் வெளிக்கிளம்பும் திறமை யற்றவையாகவே இருக்கின்றன. எரியும் அக்னியில் இடப்பட்ட மெழுகுபோல, பூர்ண அகண்ட போதவடிவின னாகிய என்னிடத்தில் அவை (ஸூக்ஷ்மசரீரம்) லீனமடை கின்றன. மீண்டும் பிறப்பு முதலியவை கிடையாது.

**விளக்கம்**

*பிராரப்த கர்மம் (ஞானிகளுக்கும்) அனுபவிக்கப் பட்டுத்தான் அழிவடைகிறது. அவ்வாறு அந்த பிராரப்தகர்மா கழிந்த பின், எனது பிராணன் முதலியவைகள் வெளிக் கிளம்புவதற்கு திறமையற்றவை. ஏன் அப்படி என்று கேட்கிறாயா? மற்ற எல்லோருக்கும் பிராணன்கள் ஸூக்ஷ்ம சரீரத்துடன் வெளியே போகின்றதே, ஞானிக்கு ஏன் அவ்வாறு போவதில்லை என்று கேட்கிறாயா? எரியும் அக்னியில் இடப்பட்ட மெழுகைப்போல பூர்ண அகண்டபோதமான எனது ஸ்வரூபத்தில் அவை லீனமாகிவிட்டன. ஆகையால் அவை எங்கிருந்துகிளம்பும்? மற்றவர்களுக்கே, ஞானமெனும் தீயினால் கர்மா (வினை) பொசுக்கப்படாததால், அந்த பிராணன், இந்திரியங்கள் மனம் முதலியவைகளைக் கொண்ட ஸூக்ஷ்ம சரீரம் மரணத்தின்போது வெளிக் கிளம்பி வேறு ஸ்தூல சரீரத்தில் மறு ஜன்மத்தையடைகிறது. ஆனால் எனக்கு புனர் ஜன்மம் கிடையாது. பிராணாதிகள் வெளிக் கிளம்பாது. ஸ்வரூபத்தில் ஒடுங்கி விடுவதால் எனக்கு மீண்டும் பிறப்பு இறப்பு என்பது கிடையாது.*

आम्नायमस्तकसुसंस्कृतवैभवोऽहं
व्योम्नोऽपि पूर्णतममूर्तिरहं स्थितोऽहम् ।
सर्वालयोऽहमहमाद्यवभासकोऽहं
वागाद्यगोचरसदोदितसौख्यकोऽहम् ॥४३॥

ஆம்னாய மஸ்தக ஸுஸம்ஸ்க்ருதவைபவோளிஹம்
வ்யோம்னோSபி பூர்ணதமமூர்திரஹம் ஸ்திதோSஹம் I
ஸர்வாலயோSஹமஹமாத்யவபாஸகோSஹம்
வாகாத்ய கோசர ஸதோதித ஸௌக்யகோSஹம் II43II

43. **பொழிப்புரை**

நான் வேதங்களின் மகுடங்களாகிய உபநிஷத்துக்களால் (சிரவண, மனன, நிதித்யாஸனங்களினால்) நன்கு தூய்மை யாக்கப்பட்ட சிறப்பு வாய்ந்தவன். நான் ஆகாயத்தைக் காட்டிலும் மிக மேன்மையான பரிபூர்ணவடிவினன். நான் நிலைபெற்றவன்; எல்லாவற்றிற்கும் இருப்பிடமே நான்; 'நான்' முதலிய எல்லா அந்தக்கரண விருத்திகளையும் பிரகாசிக்கச் செய்பவன் நான். வாக்கு முதலியவைகளுக்கு எட்டாதவனும், தானாய் என்றும் விளங்கும் ஆனந்த ஸ்வரூபம் நான்.

**விளக்கம்**

*நான் யார் தெரியுமா? சாதாரண மனிதன் அல்ல. நன்றாக ஸம்ஸ்கரிப்பட்டவன். தங்கத்தை ஸ்புடம் போடுவதுபோல் நன்கு தூய்மைப்படுத்தப்பட்டவன். எதனால் அத்தூய்மை யெய்தினேன் என்றால் வேதங்களின் சிரஸ்ஸான, ச்ருதி முடிவான, உபநிஷத்துக்களால் வேதாந்தத்தால், குருமுகமாக அவற்றின் சிரவணம் செய்து மனன, நிதித்யானங்களினால், ஸம்ஸ்கரிக்கப்பட்ட, பரிசுத்தமாக்கப்பட்ட, மனதையுடையவன், அத்தகைய வைபவம் பெருமை படைத்தவன் நான். ஆகாசத்தைக் காட்டிலும் பூர்ணன், எங்கும் நிறைந்தவன், நிம்மதியாக ஸ்வரூபத்திலேயே இருக்கிறேன். ஆகாசத்தைவிட பூர்ணன் என்றால், இருக்கிறாயா என்ற சந்தேகம் வரக்கூடாதென்று "இருக்கிறேன், ஸ்வரூப ஆனந்தத்தில் முற்றும் நிலை பெற்று இருக்கிறேன்" என்கிறார். எல்லாவற்றிற்கும் நான் தான் இருப்பிடம்; உலகம் முழுவதுமே என்னில் கற்பனை செய்யப்பட்டதுதான் என்பதால் 'ஸர்வாலய' என்று தன் ஸ்வரூபத்தை குறிப்பிடுகிறார். அஹங்காரம் புத்தி எல்லாவற்றையும் விளங்கச்செய்வது நான். ஸ்வரூபமான ஆத்மா இல்லையென்றால் 'நான்' என்ற ஸ்புரிப்பே இருக்காது. கேவல சைதன்ய ஸ்வரூபனாக நான் ஒன்று இருப்பதால்தான் இவை*

எல்லாவற்றிற்கும் இருப்பு சொல்லப்படுகிறது. வாக்கு, மனது இவைகளுக்கு எட்டாமலும், எப்பொழுதும் நித்யமாக, தானாகவே விளங்கிக்கொண்டிருக்கும் ஆனந்தவடிவினன் நான் நிரதிசயமான நிஜானந்தகனஸ்வரூபம் தான் என் வடிவம் என்று பொருள்.

इति श्रीसदाशिवेन्द्रसरस्वत्या
विरचित आत्मविद्याविलासः संपूर्णः ॥

***இங்ஙனம் ஸ்ரீ ஸதாசிவேந்த்ர ஸரஸ்வதியினால்
இயற்றப்பெற்ற "ஆத்ம வித்யா விலாஸம்"
முற்றுப் பெற்றது.***



